# இலக்கியப் பொழில்





எம். ரம்போலா மாஸ்கரேனாஸ் எம். ஏ.
தமிழ்ப் பேராசிரியர்
செயின்ட் ஜோசப் கல்லூரி, திருச்சிராப்பள்ளி



ஒற்றுமை நிலையம்,
நெ. 8, வியாசராவ் தெரு,
தியாகராய நகர், சென்னை 17
1951

விலை ரூ 1¼.

# அணிந்துரை.



மதராஸ் சர்வகலாசாலைத் தமிழ்ப் பேராசிரியர்,
ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள், பி.ஏ., பி.எல்.

இலக்கியம் ஒரு பூம் பொழில். அங்குள்ள மலர்கள் அழியா அழகுடையன. மாறா நறுமணம் கமழ்வன.

'இலக்கியப் பொழில்' என்னும் இந்நூலில் இளங்கோ, கம்பர், வீரமாமுனிவர் ஆகிய கவிஞர்களின் வண்ண நறுங்கவிமலர்கள் காட்சி தருகின்றன. சங்கத் தமிழிலும் பிற்காலத் தமிழிலும் உள்ள சிறந்த சொல்லோவியங்கள் இலங்குகின்றன; ஆடரங்கம் முதலிய அழகிய கலைக் கோயில்கள் அணிசெய்கின்றன. வானொலியில் அன்பர் திரு எம். ரம்போலா மாஸ்கரேனஸ் அவர்கள் பேசிய பேச்சுக்கள் இந்நூலில் அடங்கியுள்ளன.

இந்நூலாசிரியர் சிறந்த தமிழறிஞர்; நல்ல தமிழ்த் தொண்டர்; ஆர்வமும் ஊக்கமும் நிரம்பப் பெற்றவர். ஆசை பற்றி, இவர் எழுதிய நூலைத் தமிழகம் ஆதரிக்குமென்று நம்புகின்றேன்.

சென்னை,
10-4-'51.

ரா. பி. சேதுப் பிள்ளை.

# உள்ளுறை

---





சு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்

# இலக்கியப் பொழில்.

## இளங்கோவடிகள்

நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் என்ற பைந் தமிழ்ப் பெருங் காப்பியத்தைப் பாங்குற அருளியவர் இளங்கோவடிகள். இவர் சேர நாட்டில் வஞ்சிமா நகரில் இருந்து ஆட்சிசெய்த சேரலாதன் என்னும் மன்னர் பெருந்தகையின் மைந்தர். சேரன் செங்குட்டுவற்குத் தம்பி. இவர்தம் அன்னை நற்சோணை, சோழர் மரபிலுதித்த மாது ஆதலின் இவர் முடியுடைய வேந்தராம் சேர, சோழ, பாண்டியர் முதல் இருபெரும் மன்னர் பரம்பரைக்கும் பொருந்த உரிமை பெற்றவர்.

இவர் ஓர் நாள் அத்தாணி மண்டபத்தில் தன் தந்தையுடன் வீற்றிருக்கும்போது ஆங்கு ஒரு நிமித்திகன் வந்தான். இவரை முடியிருந்து அடிவரை உற்றுப் பார்த்தான். இவர்தம் அண்ணன் செங்குட்டுவன் உடனிருப்பவும், அதையும் பொருட்படுத்தாதவனாகி இவருக்கே அரசு வீற்றிருக்கும் இலக்கணம் உண்டு என்று கூறினன். இதனால் உளம் மிக வருந்தினர். அண்ணனிடத்து அளவிறந்த அன்பு. அந்த அன்புக்கு இழுக்கு ஏற்படா வண்ணம், தான் அக்கணமே துறந்து, அரசப் பொறையைத் தாங்குதற்குரிய நிலையை அவருக்கே அளித்தார்.

“ திண்பொருள் எய்தலாகும்; தெவ்வரைச் செருக்கலாகும்;
நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையும் நண்ணலாகும்;
ஒண்பொருள் ஆவது ஐயா, உடன் பிறப்பாக்கலாகா ”

ஆம். ஆக்கலாகா ஒண்பொருள் ஆவது உடன்பிறப்பு. எனவே தமையன் வருந்துதலினும், வருந்துதற்கு ஒரு சந்தர்ப்பம் உண்டாவதிலும் தாம் அரசு துறத்தலே தகவுடையது என்று தெளிந்து துறவினை மேற்கொண்டார். இச்செய்தி,

"நுந்தை தாள்நிழல் இருந்தோய் நின்னை
அரைசுவீற் றிருக்கும் திருப்பொறி உண்டென்று
உரைசெய் தவன்மேல் உருத்து நோக்கி
கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த் தானை
செங்குட் டுவன்தன் செல்லல் நீங்கப்
பகல்செல் வாயிற் படியோர் தம்முன்
அகலிடப் பாரம் அகல நீங்கிச்
சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்து
அந்தமில் இன்பத் தரசாள் வேந்தென்று
என்திறம் உரைத்த இமையோர் இளங்கொடி"

என வரூஉம் வரந்தரு காதைப் பகுதியால் பெறப்படும். உன் தந்தை பாதத்தண்டை இருந்தோனாகிய உன்னை நோக்கி அரசனாக வீற்றிருக்கும் நல் இலக்கணம் உன்னிடத்துண்டு என உரைத்த நிமித்திகன்மீது வெகுண்டு நோக்கம் செலுத்தி மணம் விரிந்த நறிய மாலையினையும், கொடி கட்டிய தேரினையும், நால்வகைப் படையினையும் உடையவனாகிய செங்குட்டுவனது துன்பம் நீங்க, ஞாயிறு தோன்றும் கிழக்காகிய திக்கினால் பெயருடைய குணவாயிலின்கண் முனிவர்கள் எதிரே அகன்ற இடத்தினையுடைய இந்நிலம் தாங்கும் சுமை தன்னைவிட்டு ஒழிய நீக்கி மனமும் சென்று அறியமுடியாத நெடுந் தொலைவில் உள்ள முடிவில்லாத இன்பத்தினை உடைய வீட்டுலகை அரசாளும் அரசன் ஆயினை என்று என்

வரலாறு கூறிய விண்ணவர் மகளாம் இளங்கொடி போன்ற கண்ணகி" என்பது இதன் பொருள்.

இந்நிகழ்ச்சி உள்ளபடியே நெஞ்சை அள்ளுவதாகவே உள்ளது. இளங்கோவடிகள் இடத்து இளமையிலேயே தோன்றி விளங்கிய நல்லியல்பிற்கு எடுத்துக் காட்டாக இலங்குகின்றது. இளங்கோ இல்லற வாழ்வினைத் துறந்தார். இகத்தின் செல்வ நிலையும் வேண்டாமென விலக்கினர். அரசுரிமை தமக்கில்லையென்று அப்பால் சென்றார். குடும்பவாழ்வு வேண்டாம் என விலகியும், செல்வத்தைத் தூவெனத் தள்ளியும், ஆட்சி உரிமையை அகல எறிந்தும், அனைத்தையுந் துறந்தும் தமிழை மட்டும் துறக்கவில்லை. துறவு நிலையில் தமக்குக் கிடைத்த ஓய்வு நேரத்தை இசை இலக்கியம் ஆகிய கவின் கலை வளர்ச்சியில் கருத்தோடு பயன் படுத்தினார். இக்காலத்தில்தான் இவர் கோவலன் கண்ணகியின் வரலாற்றை அறியலுற்றார். அவர்தம் வரலாறு இவரது கவனத்தை யெல்லாம் ஈர்த்தது. இவ்வேளை இவரைச் சந்தித்த மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் என்ற பெரும் புலவர் கண்ணகியைப்பற்றித் தாம் அறிந்ததையெல்லாம் இவரிடம் கூறிக் கண்ணகியின் கதை மூவேந்தர் நாட்டிலும் நிகழ்ந்த கதை ஆகலானும், ஏனை இருவேந்தர் இயல்பும் மன்னர் இயல்பும் பொது இயல்பும் இளங்கோவால் நன்கு அறியப்பெறும் ஆதலாலும் 'அடிகளே இக்கதையினை உலகுக்கு அருள்வீர்களாக' என்று கேட்டுக் கொண்டனர். அடிகளும்

"அரைசியல் பிழைத்தோர்க் கறங்கூற் றுவதூஉம்,
உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்துவந் தூட்டும் என்பதூஉம்"

நிலைநாட்டுதலை மனத்தகத்திருத்தி கோவலன் கண்ணகி யின் வரலாற்றை வகைப்படுத்தி இலக்கியச் சுவை மலிந்த நல்லதொரு காப்பியமாய் யாத்தனர்.

இளங்கோவடிகள் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ்த் திறம் உணர்ந்த வித்தகர் என்பது அவர் தம் சிலப்பதிகாரக் காப்பியத்திலிருந்து நன்கு துணியப் பெறும். சிலப்பதிகாரம் உரையிடையிட்ட பாட்டு டைச் செய்யுள் எனப் போற்றப்படுதல் காணவேண் டும். உரையும், இசைப் பாட்டும் ஆங்காங்கே விரவப் பெற்றதாதலின் அன்றோ இக்காப்பியம் இப்பெயர் பெற்றது?

அன்று தொட்டுப் பாண்டியனாடு மழை வறங்கூர்ந்து, வறுமை எய்தி வெப்பு நோயும் குருவும் தொடரக் கொற் கையிலிருந்த வெற்றிவேற் செழியன் நங்கைக்குப் பொற் கொல்லர் ஆயிரவரைக் கொன்று களவேள்வியால் விழ வொடு சாந்தி செய்ய நாடு மலிய மழை பெய்து நோயும் துன்பமும் நீங்கியது.

அது கேட்டுக் கொங்கிளங் கோசர் தங்கண் நாட்ட கத்து நங்கைக்கு விழவொடு சாந்தி செய்ய மழை தொழி லென்றும் மாறாதாயிற்று.

அது கேட்டுக் கடல்சூழ் இலங்கைக் கயவாகு என் பான் நங்கைக்கு நாட்பலி பீடிகை கோட்ட, முந்துறுத் தாங்கு அரந்தை கெடுத்து, வரந்தருமிவளென ஆடித் திங்களகவையின் ஆங்கோர் பாடி விழாக்கோள் பன்முறை எடுப்ப மழை வீற்றிருந்து வளம்பல பெருகிப் பிழையா விளையுள் நாடாயிற்று.

என்றித் தொடக்கத் தனவெல்லாம் இளங்கோவடிகள் தந்த ஒப்புயர்வற்ற அற்புதக் காப்பியத்தின் திப்பியமான உரை நடைப் பகுதிகள் என்னலாம்.

கானல் வரி, வேட்டுவ வரி, ஆய்ச்சியர், குரவை, துன்பமாலை, குன்றக் குரவை, வாழ்த்துக் காதை, ஆகிய பகுதிகளிலெல்லாம், கற்போரை மகிழ்விக்கும் சொற்பொருள் நயங்கள் வாய்ந்தன. இப்பகுதிகளில் திருமால் முருகவேள் ஆகிய கடவுளர்களைத் துதிப்பனவும், மூவேந்தர்களை வாழ்த்துவனவுமாகிய இசைப்பாக்கள் ஏராளமாயுள.

> கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதிக் காமன்
> செயலெழுதித் தீர்ந்தமுகம் திங்களோ காணீர்
> திங்களோ காணீர் திமில்வாழ்நர் சீறூர்க்கே
> அங்கண்ஏர் வானத்தரவஞ்சி வாழ்வதுவே.

கண்ணெனக் கயலையும், புருவமென வில்லையும், கூந்தலெனக் கரிய மேகத்தையும் எழுதி அவற்றுடன் பிறரை வருத்துந் தொழிலையும் எழுதி முற்றியமுகம் திங்களோ, காணீர், அழகிய இடத்தை யுடைய வானத்து இருப்பின், இராகு கேதுக் கஞ்சி படகோட்டி வாழ்பவருடைய சிறிய ஊரின்கண் வந்து உறையும் அழகிய முகம் திங்களோ என வியந்து அது நிலத்தின் கண் வருதற்குக் காரணம் கற்பித்ததைக் கருதுக.

> "மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகை முடியத்
> தாவிய சேவடிசேப்பத் தம்பியொடுங்கான்போந்து
> சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
> சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே
> திருமால்சீர் கேளாத செவி என்ன செவியே"

"அணிமுகங்கள் ஓராறும் ஈராறு கையும்
இணையின்றித் தானுடையான் ஏந்திய வேலன்றே
பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ணம்
மணிவிசும்பிற் கோனோத்த மாறட்ட வேலே"

என்பன முறையே திருமாவின், செவ்வேளின் சீர்த்தியை விதந்தோறும் பாக்களிற் சிறந்தன.

அடிகளது இசைத்திறத்திற்கு எடுத்துக் காட்டாகத் திகழ்வனவாகவன்றி அவர்தம் நடுநிலைமைக்கும் உரியனவாகக் கீழ்வரும் ஊசல்வரிப் பாடல்களைக் கருதலாம்.

வடங்கொள் மணியூசல் மேல்இரீஇ ஐயை
உடங்கொருவர் கைநிமிர்த்தாங் கொற்றைமே லூக்கக்
கடம்பு முதல்தடிந்த காவலனைப் பாடிக்
குடங்கைநெடுங் கண்பிறழ ஆடாமோ ஊசல்
கொடுவில் பொறிபாடி ஆடாமோ ஊசல்

ஓரைவர் ஈரைம் பதின்மர் உடன்றெழுந்த
போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த
சேரன் பொறையன் மலையன் திறம்பாடி
கார்செய் குழலாட ஆடாமோ ஊசல்
கடம் பெறிந்த வாபாடி ஆடாமோ ஊசல்

வன்சொல் யவனர் வளநாடு வன்பெருங்கல்
தென்குமரி யாண்ட செருவில் கயல்புலியான்
மன்பதைகாக் குங்கோமான் மன்னன் திறம்பாடி
மின்செய் இடைநுடங்க ஆடாமோ ஊசல்
விறல்வில் பொறிபாடி ஆடாமோ ஊசல்.

இத்தகு இன்னிசைப் பாக்களாலும் கூத்துக்களாலும் சிலப்பதிகாரம் நாடகக்காப்பியம் என்ற பெயருக்

கும் பொருந்துவதாகும். இயலிலே, இசையிலே, வல்ல அடிகள், நாடகத் துறையிலும் நனி சிறந்து விளங்கு கிறார் என்பது ஒருதலை.

நாடகங்கள் இன்பியல் நாடகங்கள் என்றும், துன்பியல் நாடகங்கள் என்றும், வரலாற்று நாடகங்கள் என்றும் மூன்று வகையாக வகுக்கப்பெறும். உலகுபுகழ் புலவர் மணியாகத் திகழும், ஷேக்ஸ்பியரது நாற்பது நாடகங்களிற் சில துன்பியல் நாடகங்கள், சில இன்பியல் நாடகங்கள், பிறவரலாற்று நாடகங்கள். இப்பெரும் பாகுபாட்டை இளங்கோவடிகளின் ஒரே நாடகத்தில் காணலாம். புகார்க் காண்டத்தின் பெரும்பகுதி இன்பியலாகவும், மதுரைக் காண்டம் துன்பியற் பகுதியாகவும், வஞ்சிக் காண்டம் வரலாற்றுப் பகுதியாகவும் அமைவதைக் காணும்போது, இளங்கோவடிகள் நுண்மாண் நுழைபுலத்தை வியவாதிரேம்.

ஒரு பெருமகன் தன் குணக் கேட்டால் சூழ் நிலையால் வீழ்கின்றதே துன்பியல் நாடகத்தின் சாரம் என்ற மேனாட்டுக் கலை ஞானிகளின் கருத்து இளங்கோவடிகள் சித்தரிக்கும் கோவலன் என்னும் பெருமகனுக்கும் பொருந்தி வருவதாகும் கோவலன் மண் தேய்த்த புகழினன், மதிமுக மடவார்தம் பண் தேய்த்த மொழியினர் ஆயத்துப் பாராட்டிக் கண்டு எத்தும் செவ்வேள் என்று இசை போக்கிக் காதலாற் கொண்டேத்தும் கிழமையான். அவன் கருணை மறவன்; இல்லோர் செம்மல்; பிறர் பிழைபொறுக்கும் பெற்றியான்; தன்னையும் கண்ணகியையும் இகழ்ந்தவர்களை சபித்த கவுந்தியடிகளை நோக்கி,

நெறியின் நீங்கியோர் நீரல கூறினும்
அறியாமை என் றறிதல் வேண்டும்

என்று சொல்லிச் சாபநீக்கம் விழைந்தவன். இத்தகையோன் வீழக்காரணம் அவன்தன் குணக்கேடும் சூழ் நிலையும்.

காப்பியத் தலைவனின் வீழ்ச்சி கூறி, அத்தோடு அமைந்து விடவில்லை இளங்கோவடிகள். கோவலன் வரலாற்றில் மூன்று குறிக்கோள்களை நாட்டுவதாகக் காப்பியப் பதிகத்தில் கூறியது போலவே இறுதியில் கோவலன் வரலாற்றால் மக்கள் தெரியவேண்டிய பேருண்மைகளை அறவுரையாக அறிவுறுத்துகின்றனர்.

பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வந் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை அஞ்சுமின் புறஞ்சொல் போக்குமின்
ஊனூண் துறமின் உயிர்க்கொலை நீங்குமின்
தானஞ் செய்ம்மின் தவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் தீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருள்மொழி நீங்கன்மின்
அறவோர் அவைக்களம் அகலா தணுகுமின்
பிறவோர் அவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை யஞ்சுமின் பிழையுயிர் ஓம்புமின்
அறமனை காமின் அல்லவை கடிமின்
கள்ளும களவும் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்.

இலக்கியத்தின் நோக்கம் இன்பம் நல்குவது மாத்திரமல்ல. இன்பம் நல்குவதோடு அறிவினைப் புகட்டுவதே இலக்கியம். இதனை நன்குணர்ந்தனர் இளங்கோவடிகள். எனவேதான் சிலப்பதிகாரம் இன்பக்காட்சிகள் மல்கிய அறிவுக்களஞ்சியமாகத் திகழ்கின்றது.



# இளம்பூரணர்

இளம்பூரணர் என்னும் மாண்பு மிக்க இயற்றமிழ் ஆசிரியர் ஒல்காப் புகழுடைத் தொல்காப்பியத்திற்கு உரைகண்ட பேரறிஞர்களில் முதன்மையாக வைத்தெண்ணப்படுபவர். தொல்காப்பிய உரையாசிரியர்களுடைய வரிசையைக் குறிப்பிடும்போது சிவஞான யோகிகள், அவ்வரிசையில் இளம்பூரணர் பெயரையே முதற்கண் கூறுகின்றார்கள். இவரே முதல் உரைகாரர் என்பது "உரையாசிரியர்" என்னும் பொதுப் பெயரே இவருக்குரிய சிறப்புப் பெயர்போல வழங்கப் பெறுவதிலிருந்து அறியத் தகும். இவர்தம் உரைச் சிறப்பாலும் இவருக்கு இப்பெயர் வழங்கலாயிற்று என்று எண்ண இடம் இருக்கின்றது.

இவர் உரன் என்னும் கோட்டியால் ஓரைந்தும் காக்கும் நன்னெறியில் நின்ற துறவியாவர். சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார் உரையாசிரியரான இளம்பூரண அடிகள் என்று குறித்து அடிகள் என்றது துறத்தலான் என்று பொருள் உரைக்கின்றார். ஆக, இளம்பூரணர் துறவு பூண்டவர் என்பது விளக்கமாகின்றது. "பொறியார் அடக்குவரோ அவர்பால் புலமையுறும்" என்பது ஒரு புலவர் கூற்று. இக்கூற்றிற்கேற்ற இவருடைய துறவு நிலை இவரைப் புலவுத் துறை முற்றிய நலத்தகையராக்க ஏதுவாயிற்று என்று கொள்ளுதல் பொருந்தும்.

நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவர் தம் சூத்திரங்களிற் சிலவற்றை இளம்பூரண அடிகளது உரைக்

கருத்தைத் தழுவியே எழுதியுள்ளார் என்று தெரியக் கிடக்கின்றது. உதாரணமாக,

"எப்பொருளாயினும் அல்லது இல் எனில்
அப்பொருள் அல்லாப் பிறிது பொருள் கூறல்"
"அப்பொருள கூறிற் சுட்டிக் கூறல்"

என்ற தொல்காப்பியச் சூத்திரங்களில் அல்லது இல் எனின் என்பதற்குத் தன்னுழை உள்ளது அல்லதை இல் எனின் எனவும் "அப்பொருள் அல்லாப் பிறிது பொருள் கூறல்" என்பதற்கு இனப்பொருள் கூறுக எனவும் இளம்பூரண அடிகள் உரை கூறினர். இவ்வுரைப் பொருளே தனக்கு உடன்பாடு எனக்கொண்டு நன்னூலார்

"தம்பால் இல்லது இல்லெனின் இனனாய்
உள்ளது கூறியும் மாற்றியும் உள்ளது
சுட்டியும் உரைப்பர் சொற்சுருங் குதற்கே"

என்று சூத்திரஞ் செய்தார். இதுபோன்று ஆசிரியர் இளம்பூரணரது உரைப்பொருளை ஏற்று அதன் வழி பற்றிப் பவணந்தியார் செய்துள்ள சூத்திரங்கள் பல. இவற்றிலிருந்து இளம்பூரணர் பவணந்தியாருக்கு முற்பட்டவர் என்று அறியலாம். மூன்றும் குலோத்துங்கன் காலத்தவராகிய சீயகங்கன் என்னும் சிற்றரசராலே ஆதரிக்கப் பெற்ற பவணந்தி முனிவர் காலம் 13 ம் நூற்றுண்டு என்று துணியப்படுகின்றது. இளம்பூரணர் காலம் அதற்கு முற்பட்டது. அதாவது 12-ம் நூற்றுண்டின் இறுதி அல்லது 12-ம் நூற்றுண்டின் தொடக்கம் என்னலாம். இளம்பூரணம் 12-ம் நூற்றுண்டில் இயற்றப் பெற்றிருத்தல் கூடும்.

இளம்பூரணர் என்னும் பெயர் குமாரக் கடவுளாகிய முருகப்பிரானுக்குரிய பெயராதல் நோக்கத்தக்கது. இதன் காரணமாக இளம்பூரணர் சைவர் என்று கருத இடமுண்டு.

இளம்பூரணவடிகள் தொல்காப்பியத்திலுள்ள எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று அதிகாரங்களுக்கும் உரை எழுதியிருக்கிறார்கள். இவற்றுள் எழுத்திற்கு இளம்பூரணம் என்று பெரியவர்களால் எழுத்ததிகார உரை சிறப்பாகப் போற்றப் பெற்றுள்ளது. ஏனைய இரண்டதிகார உரைகளும் சிறப்பாகவே அமைந்துள்ளன இளம்பூரணர் சொல்லதிகார உரையை அாருறச் செப்பனிட்டுத் தந்தவர்கள் நமசிவாய முதலியாரவர்கள். எழுத்ததிகார உரைக்குப் பல பதிப்புக்கள் உள. பொருளதிகார உரை முழுமையையும் புதுக்கியவர்கள் வ. உ. சிதம்பரம் பிள்ளை.

இஃதன்றி இறையனார் களவியலுக்கு நக்கீரர் உரையன்றி இளம்பூரணவடிகள் உரையும் இருந்ததாக ஆராய்ச்சியாளர் கூறுவர். "தொல்காப்பிய மரபியலில் உள்ள வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதல் நூலாகும்" என்னும் சூத்திர உரையில் "கடைச் சங்கத்தாருள் களவியல் பொருள் கண்ட கணக்காயனார் மகனார் நக்கீரர் 'இடைச் சங்கத்தார்க்கும் கடைச்சங்கத்தார்க்கும் நூலாயிற்றுத் தொல்காப்பியம்' என்றாராகலானும் பிற்காலத்தார்க்கு உரை எழுதினோரும் அது கூறிக் கரிபோக்கினாராகலானும் அவர் புலவுத் துறந்த நோன்புடையாராகலான் பொய் கூறாராகலானுமென்பது' என்று பேரா

சிரியர் குறிக்கின்றார்கள் புலவுத்துறந்த நோன்புடையார் என வருந்தொடர் இளம்பூரணவடிகளைக் குறிப்பதாகும் எனக் கருதுகின்றனர். அதுவும் ஒருவாறு பொருந்தும் என்பது சொல்லதிகாரத்திற்கு இளம்பூரணர் வகுத்த உரைப் பகுதிக்கும் களவியல் உரைப் பகுதிக்கும் உள்ள ஒற்றுமைப் பாட்டால் விளங்கும்.

களவியல் முதற் சூத்திர உரையில் என்மனார் என்னும் சொல்லுக்கு என் என்னும் முற்றுச் சொல் குறைக்கும் வழி குறைத்தலும் என்பதனால் பகரம் குறைத்து, விரிக்கும் வழி விரித்தல் என்பதனால் 'மன்' 'ஆர்' என்பன இரண்டிடைச் சொற்பெய்து விரித்து என்மனார் என்றாயிற்று என முடிவு கூறப்பட்டுள்ளது. இச்சொல்லும் பொருளுமே சொல்லதிகார இளம்பூரண உரையிலும் காணக்கிடக்கின்றன. சேனாவரையரும் இவ் என்மனார் என்னுஞ் சொல் முடிவு இளம்பூரணருடையதே எனக்கூறி மறுத்தார். களவியல் உரைகாரர்க்கும் உரிய அபிப்பிராயத்தை இவர் உரையாசிரியர் அபிப்பிராயம் எனக்கொள்ளுதலினாலே உரையாசிரியர்கள் களவியற்கு உரை வகுத்தவர் என்பது சேனாவரையர்க்கு உடன்பாடெனத் தெரிகின்றது.

களவியல் ஏழாம் சூத்திர உரையில் "செலவினும் வரவினும் தரவினும் கொடையினும் என்னும் சூத்திரத்துள் இலேசினால் முன் குறித்த பொருள் முடியும். ஆதலின் அன்றே தூண்டில் வேட்டுவன் வாங்கவாராது என்று சான்றோர் சொல்லினார் என்றது" என்ற வாசகம் காண்கின்றோம்.

"ஏனை இரண்டும் ஏனை இடத்த"

என்னும் சொல்லதிகார இளம்பூரணத்திலும் இப் பொருட் கருத்தே இடம் பெறுகின்றது. சேனாவரைய ரும் அச்சூத்திர உரையில் தூண்டில் வேட்டுவன் வாங்க வாராதென்பதனை "உரையாசிரியர் அமைத்தாராகலின் அவர்க்கது கருத்தன்றென்க" என உரையாசிரியர் அமைத்ததாகவே சொல்லுகின்றார். களவியல் உரை காரர் இதே கருத்தைக் கூறவும் உரையாசிரியர் கருத் தாக மட்டும் கூறுவதற்கு யாது காரணம் என்று கரு தும்போது இளம்பூரணர் களவியல் உரை கண்டார் என்னும் உண்மை வலியுறுத்தப்பெறும்.

இளம்பூரணர் எழுதுகின்ற செந்தமிழ்ச் சீர்மை யைக்கொண்டு அவர்க்கு வடமொழிப் பயிற்சி இல்லை என்பது அறியப்படும். சிவஞான முனிவர் இதைத் தெளிவாகக் கூறிவிட்டார்கள். இளம்பூரணரைப் பற்றி "தமிழ்மொழி ஒன்றே வல்ல உரையாசிரியரை உள்ளிட்ட" என்று கூறுவது காண்க. வடமொழிப் பயிற்சி இன்மை ஒருவகையில் நன்மைக்கே எனக் கொள்ளவேண்டும். இவரது உரை நடை தூய தென் தமிழ்ச் சொற்களாலே இயங்குகின்றது. எனவே தெளி வும் வன்மையும் விரைவும் இவரது உரை நடையின் சிறப்பியல்புகளாக இலங்குகின்றன. சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் ஆற்றல் இவரிடத்தில் மிகுதியாகக் காணப்படுகின்றது.

இனிமையும் தெளிவும் கூடிய இவர்தம் உரை நடையிலிருந்து எடுத்துக் காட்டாக சில பகுதிகளைக் காண்போம்.

"உலகத்தில் நூல் செய்தார் செய்கின்றது அறிவிலாதாரை அறிவு கொளுத்த வேண்டியன்றே. யாதானும் ஒரு நூல் விரித்தோதிய பொருளைத் தானும் விரித்தோதுவானாயின் ஓதுகின்றதனால் பயன் இன்றாமாதலால், முதனூலாசிரியர் விரித்துக் கூறிய பொருளைத் தொகுத்துக் கூறலும் தொகுத்துக் கூறின பொருளை விரித்துக் கூறலும் நூல் செய்வார் செய்யும் மரபாம் என்க. இன்பம் காரணமாகப் பொருள் தேடுமாகலானும், இன்பமும் பொருளும் ஏற்றமெனா ஓதினாரென உணர்க"

பிரவாகமாய்ப் பெருக்கெடுத்தோடும் காட்டாறு வழியில் இன்னோரை முழுங்கிக் கொண்டே பெருமிதத்தோடு செல்லும் தன்மையை ஒத்து சிற்சில விடங்களில் இவர் தம் உரை நடை காணப்பெறும். இதற்கு உதாரணமாக ஒரு பகுதியைக் கவனிப்போம்.

"இதற்குக் கொன்றையா லமைந்த தாரினானாய், மாலையனாய், கண்ணியனாய் நுன்ஞாண் மார்பினனாய் இமையா நாட்டத்து நுதலினனாய்க் கணிச்சியும், மழுவும் மூவாய் வேலும் ஏந்திய கையினனாய் யாவர்க்கும் தோலா தோனுமாய், ஏற்றினையும் ஊர்ந்து, உமையாளையும் சேர்ந்து, செவ்வான் அன்ன மேனியையும் பிறை போன்ற எயிற்றினையும் எரிபோன்ற சடையினையும் திங்களொடு சுடரும் சென்னியையும் உடையவனாய் சுரர் அசுரர் முதலிய யாவரும் அறியா தொன்முறை மரபினனாய், புலியும் தனையும் உடுத்த யாழ்கெழு மணி மிடற்று அந்தணனது சிவானுபூதியிற் பேருலகம் தங்கிற்று எனப் பொருள் உரைக்குங் காலத்து அதன் கண் இடைக்கிடைக்கிடந்த சொற்கள் முன்னொடுபின் வாய்

பாடுகள் சேராதன்றே. அவ்வழி அவ்வாய் பாட்டாற் போந்த பொருளுரைப்பச் சேர்த்தவாறும் இசைதிரித் திசைத்தவாறும் அவை நத்தம் நிலையிற் குலையாமை நின்று பொருள் பட்டவாறும் கண்டு கொள்க.''

அடிகள் இளம்பூரணரிடம் பிற ஆசிரியர்கள் நல்ல பற்றும் சிறந்த மதிப்பும் உடையவர்கள் என்பது அவர்கள் அடிகளைப் பற்றிக் கூறுகின்ற நல்லுரைகளிலிருந்தும் அடிகளாரது உரைத் திறனைப் பற்றிக் கூறும் மதிப்புரைகளிலிருந்தும் தெளிவாகின்றது. மயிலைநாதர் என்ற உரையாசிரியர் இளம்பூரணரைப் பற்றிப் பேசுங்கால் "ஒல்காப் புலமைத் தொல்காப்பியத்துள் உளங்கூர் கேள்வி இளம்பூரணர் எனும் ஏதமிலாதவர்'' என்று மரியாதையுடன் கூறுவர். இளம்பூரணத்தைப் பற்றிய மதிப்புரை சொல்ல வந்த காலத்து "உளம்கூர் உரையாம் இளம்பூரணம்'' என்று ஏற்றிச் சொல்வர் இலக்கணக் கொத்துரையுடையார்.

சொல்லதிகாரத்திற்குச் சிறந்த உரை வகுத்த சேனாவரையர் உரையாசிரியரை மறுத்துரைத்த இடத்திலும் அவர்பால் தமக்குள்ள மதிப்பினைப் புலப்படுத்தும் சொற்களாலேயே மறுத்துரைக்கின்றார். உதாரணமாக இரண்டொன்று காட்டலாம். "அவர் பிறர் மதம்பற்றிக் கூறினார்'' எனவும் "மாணாக்கருக்கு உய்த்துணர வைத்தல் அவர்க்கு இயல்பாகலின் செய்யுள் முடிவென்று கூறுராயினர்'' எனவும் "உரையாசிரியருக்கு அஃது கருத்தென்க'' எனவும் வணக்கத்துடனும் அச்சத்துடனும் சொல்வதால் சேனாவரையர் அவர்பால் கொண்டுள்ள மதிப்பு நன்கு விளங்கும். இளம்பூர

ணர் கருத்துரையை சேனாவரையர் எத்துணை உயர்வாகப் போற்றினர் என்பதை "உரையாசிரியர்க்கு அது கருத்தன்றென்க" என்று கூறிய அளவாலே அறியலாம்.

தொல்காப்பியம் என்ற கலைக்கோவிலிலே முதன் முதல் திருவிளக்கேற்றி ஆங்குள்ள வியத்தகு பொருள் நுட்பங்களை அறிஞர் கண்டு மகிழச்செய்த பெருமை இளம்பூரணரையே சாரும். இவரைப் பின்பற்றிய வழியிலேதான் பிற உரை யாசிரியரும் அவ்வரும் பெரும் பொருள் நுட்பங்களைப் பற்றிய மாசு களைந்து தூசி படியாதவாறு தொண்டு செய்தனர். நச்சினார்க்கினியர் பேராசிரியர் முதலிய பெரியோர்கள் இளம்பூரணர் உரையைக் கருவியாகக் கொண்டே தத்தம் உரையைச் செப்பமுற எழுதினவர்களாதலின் அவர்கள் அம்முறையில் அடிகளாருக்கே கடமைப்பட்டவர்களாவர்.



## இலக்கிய நாயகன் இராமன்

இயல், இசை, நாடகம் என்ற தமிழின் முக்கூறு பாட்டின் முழுச்சுவையும் கொண்டதாயும் மாநில மாந்தர்தம் மன இயல்புகளைத் தெரிவிப்பதில் திறன் மிக்கதாயும், பகுத்தறிவுடைய மன்னுயிர்க்குத் தம்மின் னுயிரினும் விழுமிய ஒழுக்க நலன்களை உபதேசிப்பதா யும், படிக்கப் படிக்கத் தெவிட்டாத காவியச் சுவை கனிந்ததாயும் விளங்கும் இராமாயணத்தின் உயிர் நிலை இராமன்.

இராமாயணம் என்ற சொற்றொடர் இராமனுக்கு இடம், இராமனது நெறி என்ற பொருள் தந்து நிற்ற லாலோ, அல்லது இராமனை அறிவிப்பது என்ற பொரு ளைப் பயப்பதாலோ அவனைக் காவியத்தின் உயிர்நிலை என்கிறோமா? ஆம், அதற்காகவுந்தான். ஆனால் அதற் காக மட்டுமல்ல. "இராமாவதாரப் பேர்த்தொடை நிரம்பிய தோமறு மாக்கதை" என்று கம்பரே கூறுவ தனாலுங்கூட, இராமன் கதைக்கு உயிர் என்கிறோ மில்லை.

காவியத்தில் இராமனைப்பற்றிப் பேசுகின்ற இட மெல்லாம் கம்பர் பெருமானின் இணையற்ற இதயத் துடிப்பைக் காணலாம். பிற கதா பாத்திரங்களைச் சித்தரிக்கும்போது உயிர்க் கவி கம்பன் தன் உள்ளத் துடிப்பை இழந்து விடுகிறான் என்பதல்ல; தனது காவியத்தின் நாயகன், ஈடும் எடுப்பும் இல்லா இணையற்ற வீரன் என்பதை நன்குணர்ந்த முறையில் அவன் குண நலன்களை எழிலுறத் தீட்டுதலைத் தன் தலையாய கடமை யாகக் கொள்கின்றான் கம்பன்.

இலக்கிய நாயகன் இராமன் தானியற்றும் காப்பி யத் தலைவனாக மட்டுமல்ல, இகத்தில் இலங்குகின்ற தலைவனாகவும் உள்ளவன் என்பதைக் கம்பன் பல இடங் களில் செவ்வையாய் எடுத்துக் காட்டுகிறான்.

இராமனின் இளமைப் பருவம். தம்பியரோடு அர சிளங் குமரர்க்கேற்ற அருங்கலை பயில்கின்றான். யானை யேற்றம், குதிரையேற்றம், வில், வாள், வேல் முதலிய பயிற்சிகளில் சிறந்து வளர்கின்றான். உடலுழைப்பால் உறுதி பெறுகிறான். ஒரு நாள் மாலைக் காலத்திலே தனது ஞானாசிரியர்களோடு உரையாடி வீட்டிற்கு மீளும் வேளை. சகோதரர்களுடன் நடந்தே வருகின் றான். வரும் வழியில் குடிஜனங்களிற் சிலர் எதிர்ப் படுகின்றனர். அவர்கள் அரசிளங் குமரர்களைக் கண்டு அஞ்சலி செய்கின்றனர். இராமன் குடிகளோடு ஒத்த உணர்ச்சியுடையவனாய் அவர்களுடைய க்ஷேம நிலையைக் கேட்டருள்கின்ற தன்மையைக் கம்பர் கூறு கின்றபடி இதுவாம்.

"எதிர்வரும் அவர்களை எமையுடை இறைவன்
முதிர்தரும் கருணையின் முகமலர் ஒளிரா
எதுவினை? இடரிலை? இனிது நும்மனையும்?
மதிதரும் குமரரும் வலியர் கொல்? எனவே"

ஜனங்கள் மீது அரசிளங்குமரனாகிய இராமனுக் குக் கருணை முதிர்கின்றது. உள்ளத்தில் முதிர முகம் மலர்கின்றது. மலர்ந்த முகத்தோடு அவர்களை நோக்கி உங்கள் தொழிலென்ன? துன்பமில்லாதிருக்கின்றீர் களா? உங்கள் மனை வாழ்க்கை இனிதாய்க் கழிகின் றதா? மைந்தர் வலிமையோடு வளர்கிறார்களா? என்று பரிவோடு கேட்கிறான். ஆளப்படுவோரின் க்ஷேம லாபங்

களை அறியவேண்டும் என்பதில் இராமன் எத்துணை ஆவல் காட்டுகிறான்.

ஆண்டில் இளைஞனாயினும், அறிவில் முதிர்ந்தவனாய் உலகியலை உய்த்துணர்ந்தவனாய்க் குடிகளின் நல்வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படுவது செய்தொழில் என்பதைத் தெள்ளத் தெளியத் தெரிந்து கொண்டே முதற்கண் அவர்களை நோக்கி எதுவினை என வினவுகிறான். செய்தொழிலமையினும் வேலை நிலையத்தில் இடர் அற்றிருத்தல் அவசியம் என்பதையும் இத்தோடு இனிய மனை வாழ்க்கை இடர்களையும் பெற்றியது என்பதையும் தேர்ந்து இடர் இலை, இனிது நும்மனையும், என்று அடுத்தடுத்து வினவுகின்றான். ஆட்சி பாரம் ஏற்பதன் முன்பே குடிஜனங்களிடம் இத்தனை காருண்யமுடையவனாக இருக்கும் இராமனின் எழிற்குணம் அவனது பரம்பரை இறைமைக் குணத்தோடு இயைவதொன்றே. அன்பு கனிந்த இத்தகு நல்லுரைகளைக் கேட்ட அவர்கள் "ஐய அஃது" என்று பணிவுடன் பதில் கூறி இத்தகைய நல்லரச குலத்தைத் தலைமையாய்ப் பெற்றதற்காக உளமகிழ்ந்து செல்கின்றனர்.

தசரதன் இராமன் கல்யாணங் கண்டு மகிழ்ந்தது போல அவனது மகுடஞ் சூட்டுங் காட்சியையுங் கண்டு ஆனந்திக்க விழைந்தான். மந்திரிகளிடம் அவன் அபிப்பிராயத்தை அறிவிக்கவும் அவர்கள் அனைவரும் ஆமோதிக்கின்றனர்; அம்மந்திரி பிரதானிகள் முன்னிலையில் இராமனை அழைத்து அவனுக்குப் பட்டஞ் சூட்டும் முடிவினைத் தெரிவிக்க இராமன் தான் சக்ரவர்த்தியாகப் போகின்றேனே என்று மகிழ்கின்றானா? அல்லது இப்

பெரும் பாரம் நமக்கேன் என்று நலிகின்றானா? மகிழவு மில்லை. நலியவுமில்லை.

"தாதை அப்பரிசு உரை செய தாமரைக் கண்ணன்
காதல் உற்றிலன்; இகழ்ந்திலன்; கடன் இது என்றுணர்ந்
யாது கொற்றவன் ஏவியது அச்செயல் அன்றோ [தும்
நீதி எற்கென நினைந்துமப் பணிதலை நன்றான்."

"இவ்வாட்சி ஏற்றல் நம் கடமை, மேலும் அரசன் ஏவியதைச் செய்தலே நீதி" என்ற உயர்ந்த சிந்தனை களால் உந்தப்பட்டவனாக அரசுரிமையை ஏற்க இசைந் தான் என்று அறிகின்றோம். பணிய அறிந்தவனே பாராளத் தெரிந்தவன் என்பது அநுபவ வாக்கு. கடமை யுணர்ச்சியை மதித்துத் தலைமை ஏற்க இசைந் தான். இஃதொன்றே அவன் அவனியை ஆளப்பிறந்த ஆண்டகை என்பதை எண்பிக்கச் சாலும். இலக்கிய நாயகன் இராமன் இன்னோரன்ன இடங்களிலே தான் இலங்கும் நாயகன் என்பதை நிறுவுகின்றான். அவன் பால் இயல்பிலே அமைந்த இத்தகு குணமும், இன்னோ ரன்ன பிற குணங்களும் வாசகர்களை அவன்பால் ஈர்க்கின்றன.

"இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள் துன்பம் உறுதல் இலன்" என்பது வள்ளுவர் வாக்கு. இன்பம் வந்த காலத்து அதனை அநுபவியாமல் இருக் கின்றவன் துன்பம் வந்த காலத்தும் வருந்தான் இம் மொழிக்கு இலக்கியமாயிருப்பவன் இலக்கிய நாயகன் இராமன். கைகேயியின் சூழ்வினையால், வஞ்சகச் செய லால், நிலை தளர்ந்தானில்லை. அவன் "ஆழி சூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள நீ போய்த் தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கரும் தவமேற்கொண்டு பூழி வெங்கானம்

நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடி, ஏழிரண்டாண் டில் வாவென்றியம்பினன் அரசன்" என்றாள். இதைக் கேட்டதும் இராமன் அடியற்ற மரம்போல கீழே விழுந்து விட்டானா? அற்பமேனும் அயர்வு கொண்டானா?

"இப்பொழு தெம்மனோரால் இயம்புதற்கெளிதே யாரும்
செப்பருங் குணத்திராமன் திருமுகச்செவ்வி நோக்கின்
ஒப்பதே முன்பு; பின்பவ் வாசகம் உணரக்கேட்ட
அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா"

என்ன திடச்சித்தம்; எத்தகைய மன அமைதி; எவ் வாறான நிலைகுலையாத் தன்மை.

இராமனின் முகமலர்ந்த தன்மையைக் கண்டோம். இனி அவன் அகமலர்ந்து அருளுகின்ற வாசகத்தைச் செவி கொடுத்துக் கேட்போம்.

"மன்னவன் பணியன்றாகில் நும்பணி மறுப்பனோ என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றோ?
என்னினி உறுதி அப்பால் இப்பணி தலைமேற்கொண்டேன்
மின்னொளிர் கானம் இன்றே போகின்றேன் விடையுங்
[கொண்டேன்"

"அம்மா, தாங்கள் இயம்பினன் அரசன் என்றீர் களே. அரசனே இயம்பவில்லை. தாங்களே சொன்னீர் கள் என்று வைத்துக்கொள்வோம். அப்படியானாலும் அடியேன் அப்பணியை மறுப்பேனோ? எனக்குக் கிடைக்க விருந்த அரசச் செல்வம் பரதனுக்குக் கிடைப்ப தானால் நான் கவலைப்பட இடமேயில்லை. பரதன் அச் செல்வம் பெற்றாலென்ன? எங்களுள் மனவேறு பாடில்லை. இருவருள் எவர் பெறினும் ஒன்றே" என்

கின்றான்; என்ன நெருங்கிய உணர்ச்சி, ஒன்றுபட்ட சகோதர நேயம்; என் பின்னவன்பெற்ற செல்வம் அடிய னேன் பெற்றதன்றோ என்று கூறுவதற்கு அடிப்படை யாய் அமைந்திருக்க வேண்டியது எத்துணை ஆழ்ந்த சகோதர வாஞ்சை.

இராமன் குடிகளிடத்திலே பேரன்பு கொண்ட வன் என அறிந்தோம்; ஆட்சிபாரம் தன்னைநோக்கி வருகின்ற காலத்து அதனால் அகமகிழாது, அரசன் ஆணை இதுவானால் ஏற்றுக்கொள்கின்றேன் என்று கூறிய குணத்தைக்கொண்டவன் என்றும் குறித்தோம். கைகேயியின் வஞ்சகச் செயலால் ஆட்சி அவனுக்கில்லை என்ற நிலை ஏற்பட்டபோது மலை குலைந்தாலும் நிலை குலையா மாண்புடையவனாக விளங்கியதைக் கண்டு வியந்தோம்.

இனி அவன் மாற்றாரை மன்னிக்கும் இயல்பினை யுடையவன் என்பதைக் காணலாம். தனக்குப் பரம விரோதியான இராவணனது தமையன் விபீடணன் அடைக்கலம் கோரித் தன்னையடைந்த காலத்து, அவ னைக் கைவிடலாகாமைக்குப் பல காரணங்கள் கூறித் தன்பக்கம் சேர்த்துகொள்கிறான்.

“இன்று வந்தானென்றுண்டோ எந்தையை யாயை முன்னம்
கொன்று வந்தானென்றுண்டோ அடைக்கலம் கூறுகின்றான்
தொன்றுவந்து அன்புசெய்யும் துணைவனும் அவனே பின்னைப்
பின்னுமென்றாலும்நம்பால் புகழின்றிப் பிறிதுண்டாமோ?”

என்பது இராமன் கூற்று. கொலை மாபாதகங்களுள் ஒன்று. தந்தை தாயைக் கொலை செய்தவனைப் பாத கனாகக் கருதுவது இயல்பே. அப்பேர்ப்பட்ட மாபாத கன் என்றாலும், அவன் இத்துணை நாளும் நமக்கு இடர்

செய்வதையே தனது தொழிலாகக் கொண்டவனாயி
னும், இன்றே நம்மைச் சேர்ந்தவன் என்றாலும், அடைக்
கலம் என்று வருகின்றவனை நாம் ஏற்றுக்கொண்டே
ஆகவேண்டும், நாளை அவனே நமக்கு விரோதமாகக்
கிளம்பினால் அதனால் ஏற்படும் பழியும் பாவமும் அவ
னையே சாரும். நாம் பெறுவது மெய்ப்புகழ் என்று
பகைவனுக்காகப் பரிந்து பேசுகின்றான் இராமனது தலை
மைக் குணத்தையே தெற்றென விளக்கிக் காட்டு
கின்றது.

நந்தா விளக்கனைய நாயகனும் இராமன் கங்கை
வேடனாகிய குகனிடத்துக் காட்டிய அன்பு மனத்தை
உருக்கும் தகையதாம். இராமன் வனவாசம் செய்ய
உடன்பட்டு அயோத்தியை நீங்கிக் கங்கைத் துறையைச்
சேர்கையில் சிருங்கி பேரபுரத்திற்கு அதிபதியும் வேடு
வர் தலைவனுமான குகன் இராமனைக் காணும் பொருட்
டுக் காணிக்கைகளுடன் வந்து நிற்கின்றான். இராமன்
அவனை நண்பனாக ஏற்று 'இங்கு இரு' என்று சொல்லி
மறுநாட்காலை கங்கையை கடத்தற்கு ஓடங் கொண்டு
வர அவனுக்குக் கட்டளை இடுகின்றான். குகனை இராமன்
யாதினும் இனிய நண்ப என்று அழைப்பது அவனது
நட்பின் திறத்தை நாடறியப் பறைசாற்றுகின்றது.
இதுமட்டுமா? இராமனது அன்பெனும் கயிற்றால்
பிணிக்கப்பட்ட குகன், இராமன் சீதை இலக்குவன்
ஆகியவரை அங்கேயே வசித்தருளவேண்டுகின்றான்.
இராமன் உடன்படக்கூடவில்லை. "புண்ணிய நதிகள்
ஆடி முனிவர் சேவைசெய்து சிலகாலம் கழித்துப்
பின்னர் உன்னிடம் வருவேன்" என்கின்றான். அப்படி
யாயின் தானும் உடன்செல் அநுமதி விழைகின்றான்
குகன். அதற்கும் இசைய இயலாதவனாய், குகனைப்

பிரிகின்ற காலத்துப் பரிவான வார்த்தைகளைக்கொண்டு தனக்கும் குகனுக்கும் ஏற்பட்டுள்ள ஐக்கியத்தைப் பலப்படுத்திக் கொள்ளுகின்றான். சீதை இராமனைப் பிரிந்து அசோகவனத்தில் அரக்கியர் சூழ, அலக்கண் அடைந்த காலை இராமனது இந்நட்பின் திறத்தை எண்ணியே இரங்குகின்றாள்.

"ஆழநீர்க்கங்கை அம்பி கடாவிய
ஏழைவேடனுக்கு எம்பிநின் தம்பிநீ
தோழன் மங்கை கொழுந்தி எனச்சொன்ன
வாழிநண்பினை உன்னி மயங்குவாள்"

அம்பி—தோணி. கங்கையாற்றைக் கடத்தற்குத் தோணி செலுத்தி உதவிய குகனை நோக்கி நட்புரிமைமட்டும் கூறவில்லை. உறவுரிமையும் பேசுகிறான். அவனது குடும்பத்தில் ஒருவனாக அவனை ஏற்றருளும் முறையில் இதோ என் தமையன் உனக்குத் தமையன், என் மனைவி உனக்குக் கொழுந்தி என்று கூறவேண்டுமானால் இராமனது இதயத்தின் விசாலத்தையும் அவனது அன்பு செய்யும் ஆற்றலையும் எவரே கணிக்கவல்லார்? "அன்பீனும் ஆர்வமுடைமை அது வீனும் நண்பெனும் நாடாச்சிறப்பு" என்ற பொய்யிற் புலவர் பொன்மொழி இராமன்பால் மெய்த்தது இலகுவில் அறியப்படும். அன்பு ஆர்வமுடைமையை ஈனும். ஒருவனுக்கு தொடர்புடையாரிடத்துச் செய்த அன்பானது அத்தன்மையால் பிறரிடத்தும் விருப்பமுடைமையைத்தரும். அது நண்பெனும் நாடாச் சிறப்பு ஈனும்—அவ்விருப்பம் உடைமைதான் இவர்க்குப் பகைவரும் அயலாந் தன்மையுடையாரும் இல்லையாய், யாவரும் நண்பரென்று சொல்லப்படும் அளவிறந்த சிறப்பினைத்தரும். இராமன்

தொடர்புடையார் மாட்டுப் பேரன்பு செலுத்துகிறான். அவன் தன் பெற்றோரிடத்துக்கொண்ட பணிவு, மனைவியிடத்துக்கொண்ட கனிவு, சகோதரனிடத்துக்கொண்ட நேயம், இவை ஒப்பற்ற நிலையில் அவனிடத்து உயர்ந்து விளங்குகின்றன. தொடர்புடையாரிடத்துக் காட்டும் இப்பரிவுதான் பிறரிடத்தும் அன்பு செலுத்தச் செய்கின்றது என்பதையே எம்பி நின்தம்பி, மங்கை கொழுந்தி என்ற விஞ்சிய நட்புரிமை பாராட்டுந்தன்மை விளக்குகின்றது. தான் குகனை நண்பனாக ஏற்றுக்கொண்டால் தன் சகோதரன் அவனை சகோதரனாகவும் மனைவி தனது கொழுந்தனாகவும் ஏற்றுக்கொள்வரோ என்று எண்ணிப் பார்த்துக் கொண்டிருக்கவில்லை. இது மாத்திரமல்ல; சுக்ரீவனையும் விபீஷணனையும் தனக்குரிய நண்பர்களாக வென்று குடும்பத்தையே சேர்ந்த சகோதரர்களாகக் கொள்ளுதல் இவனது பேரன்பின் திறத்தையே காட்டுகின்றது.

"குகனொடு ஐவரானேம்முன்பு பின்குன்று சூழ்வான்
மகனொடும் அறுவரானேம் எம்முழை அன்பின்வந்த
அகனமர் காதல்ஐய நின்னொடும் எழுவரானேம்
புகலருங் கானந்தந்து புதல்வரால் பொலிந்தான் உந்தை"

என்கிறான் இராமன்

அன்பு வாழ்வின் உயிர்நிலை. இராமன் அன்புமயமாக விளங்குகின்றான். எனவேதான் காப்பியத்தின் உயிர்நிலையாகவும் இலங்குகின்றான். காப்பியத்தின் உயிர்நிலையாக மட்டுமல்ல; உயர்நிலையாகவும் நாயக நிலையாகவும் காட்சி அளிப்பதற்குக் காரணம் அவனிடம் தலையாய பண்பாக நிலைக்கொண்ட அன்பே என்பது எவரும் ஒப்பமுடிந்ததொன்றாம்.

# வீரமா முனிவர்

ஐரோப்பாவிலிருந்து தமிழ் நாட்டிற்கு வந்து உலக மீட்பர் கிறிஸ்து பெருமானின் நற்செய்தியைக் கொண்ட அருட் சமயத் தொண்டோடு, அருந்தமிழ்த் தொண்டு செய்த குருக்களிலே சிறந்ததொரு பெருமகனார் வீரமா முனிவர். இவர் இத்தாலி நாட்டினர். அகிலம் போற் றும் பெரும் புலவன் வெர்ஜில் பிறந்த நகர்க்கு அணித் தாகவுள்ள காஸ்திக்கிளியோனே என்பது இவர் பிறந்த நகரம். இவர் பிறந்தது 1680-ம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 8-ம் நாள் இவர்தம் தந்தை பெயர் கண் டால்போ பெஸ்கி என்பது. தாயார் எலிசபெத் பெஸ்கி. இவர்தம் பிள்ளைத் திருநாமம் ஜோசப் கான்ஸ்டன் டைன் பெஸ்கி என்பதாம். பெஸ்கி என்பது குடும்பப் பெயர்.

இவர் உரிய பருவத்திற் கற்பன கற்றுக் கேட்பன கேட்டுத் தெளிந்தார் மொழித்திறன் முட்ட றுத்துணரும் தன்மை இவருக்கு இயற்கையாய் அமைந் தது தனது நாட்டிலே வதியுங் காலத்து இவர்தம் தாய் மொழியாகிய இத்தாலிய மொழியோடு எபிரேயம், கிரேக்கம், இலத்தீன், போர்த்துக் கேசியம் ஆகிய மொழி களில் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார். இத்தகைய சொற் கலை நிறைவோடு நற்குண நிறைவும் பொருந்தப் பெற் றிருந்த இளைஞர் பெஸ்கிக்கு, இயேசுநாதர் பணியில் ஈடு படவேண்டும் என்ற எண்ணம் எழுவதாயிற்று. உத்தம கத்தோலிக்கர்களாகிய இவர்தம் பெற்றோரும் தம் காதல் மைந்தனின் கருத்திற் கிசைந்து இந்நல் விருப்பத் திற்கு ஆசி தந்தனர். ஐயன் துறவியாகி, சேசுவின் சபை சேர்ந்து தர்க்கக் கலை, தத்துவக் கலை, கடவுட்

கலை ஆகியவற்றை முறையாகப் பயின்று 1709-ம் ஆண்டு குருப்பட்டமும் பெற்றார்.

சுவாமி பெஸ்கியர் இந்தியாவுக்கு வந்தது 1710-ம் ஆண்டில். கோவை மாநகரிற் சின்னாள் தங்கி ஓய்வு பெற்று, தனது போதக சேவையைத் தொடங்கினர். அம்பலக்காடு, மணப்பாடு, தூத்துக்குடி ஆகிய இடங்களில் சில காலம் தங்கினர். மணவையம்பதியிலும், மந்திரநகரமெனும் தூத்துக்குடியிலும் பெஸ்கியர் தமிழ் மொழியை ஆர்வமுடன் கற்றுத் தேர்ந்த பின்னர் காமநாய்க்கன் பட்டிக்குச் சென்றார். பின் புதுப்பட்டிக்குச் சென்றார்; புதுப்பட்டி குருக்கள் பட்டி ஆகிய இரண்டு பதிகளும் பெஸ்கியர் சேவையைப் பெற்றன. இவ்விடங்களிலெல்லாம் அவர் தமிழை இடையறாது பயின்றார். தமிழோடு தொடர்புடைய தெலுங்கு, கன்னடம் ஆகிய திராவிட மொழிகளையும் கற்றனர். வடமொழியிலும் பயிற்சி பெற்றனர். ஹிந்துஸ்தானி, பாரசீகம் ஆகிய இவற்றிலும் பயிற்சியுண்டு. பழநியில் வதிந்த சுப்பிரதீபக் கவிராயர் என்பவர் பெஸ்கியரின் தமிழ் ஆசிரியர் என்பர்.

பெஸ்கியர் தமிழிற்கொண்ட ஆர்வம் நெஞ்சை அள்ளுவதாகும். மனிதன் தன் பெயர் விளங்கவேண்டுமென்று விழைகின்றான். முனிவரோ தம் இயற்பெயராகிய கான்ஸ்டான்ஸியுஸ் என்ற பெயரை தைரியநாதன் என்ற தமிழ்ப் பெயராக்கி, தன் குடிப்பெயராகிய பெஸ்கியையும் மறந்து, தைரியநாதன் என்றே துணிவுடன் அமைக்கின்றார். பின்னர் பொது மக்களும் இவர்தம் தமிழ்த் துணிவைக் கண்டு வீரமாமுனிவர் என்று புகழத் தலைப்படுகின்றனர். பிறப்பால்

இத்தாலியர்; என்ருலும் பெயரால் தமிழர் ஆஞர். இது மட்டுமா? முனிவர் தமிழ்த் துறவியின் கோலங் கொண்ட தகைமைதான் என்னே! உணவாலும், உடுத்தும் உடையாலும் தமிழர் ஆஞர். ஒரு வரலாற்ருசிரியர் குறிக்கின்ருர் இவரைப்பற்றி: “மேலும் இவர் இந்த தேசத்தில் வந்த நாள் முதலாய்ப் புலால் மாமிசங்களை நிவர்த்தித்து இரண்டு தமிழ்த் தவசிப் பிள்ளைகளைப் பரிசுத்த அன்னபாகஞ் செய்யச்சொல்லித் தினம் ஒரு பொழுது மாத்திரம் போசனம் பண்ணிக்கொண்டிருப்பார். தமது மடத்திலிருக்கும்போது கோபிச்சந்தனம் நெற்றியிலிட்டுக்கொண்டு தலைக்குச் சூரியகாந்திப்பட்டுக் குல்லாவும், அரைக்கு நீர்க்காவிச் சோமனும், திருநெல்வேலிக் கம்பிச் சோமன் போர்வை முக்காடுமிட்டுக் காலில் பாதகுறடும் போட்டுக் கொண்டிருப்பார். இவர் வெளியில் சாரி போகும்போது பூங்காவி அங்கியும் பூங்காவி நடுக்கட்டும், வெள்ளைப் பாகையும், இளங்காவி உத்தரிய முக்காடும், கையிற்காவி உறுமாலையும், காதில் முத்துக் கடுக்கனும், விரலில் தம்பாக்கு மோதிரமும், கையில் தண்டு கோலும், காலில் சோடுடனும் வந்து பல்லக்கு மெத்தையில் மேலிட்டிருக்கும் புலித்தோல் ஆசனத்தின் மேல் எழுந்தருளியிருந்து உபய வெண்சாமரை வீசவும், இரண்டு மயிற்ருேகைக் கொத்திரட்டவும், தங்கக் கலசம் வைத்த காவிப்பட்டுக் குடை பிடிக்கவும் சாரிபோவார். இவர் இறங்குமிடங்களிலும் புலித்தோலாசனத்தின்மேல் உட்காருவார்”.

இவையாவும் வெறும் புறக்கோலம் என்று ஒதுக்குவதற்கில்லை. தமிழ் மொழிப் பயிற்சியில் தலைப்பட்டு, தமிழ் நூற்களின் இனிமை, எளிமை, ஆழமுடைமை

ஆகிய உயர் பண்புகளில் தோய்ந்து தோய்ந்து, தமிழ்ப் பெரும் புலமை எய்தி, இலக்கணம், இலக்கியம் விவகாரம், பனுவல் என்று பகுத்துக் கூறப்படும் துறைகள் தோறும் உயர் நூற்கள் எழுதும் ஆற்றல் பெற்ற அடிகளின் தமிழ் உள்ளப் பாங்கின், விரிவே அவ்வெளிக் கோலம் என்று கூறுதல் அமைவுடையதாகும்.

அடிகள் தமிழ் கற்கத் தொடங்கித் தமிழ்த் தொண்டு செய்த காலம் அரசியல் கொந்தளிப்பான காலம். மதுரையில் மீனாட்சி அம்மையின் ஆட்சி. தஞ்சையில் நாயக்கர்கள் ஒழிந்து, மராட்டியர்கள் ஆளத் தொடங்கி விட்டனர். ஆளுந்திறமையற்ற இன்னவர் காலத்தில் ஆங்காங்கே பாளையக்காரர்கள் தோன்றி அரசு ஏற்று மக்களைத் துன்புறுத்தினர். மேலும், மராட்டியர் படை எடுப்பும், ஆர்க்காட்டு நவாப்பின் படை எடுப்பும் தமிழ் நாட்டை நிலை குலுங்கச் செய்தது. இந்த அமளி குமளியான வேளையில் கடல் கடந்து வந்த ஒரு பிற நாட்டினர், தமிழ் மொழியிற் கருத்தைச் செலுத்தி உயர் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தெளிந்து, அம்மொழியிலேயே கவிபாடும் நல் வித்தை கைவரப் பெறுதல் என்பது எளிதான செயல் அன்று.

மேலும் முனிவர் காலத்தில் அச்சிடப்பெற்ற தமிழ் நூல்கள் இல்லை. தமிழ் கற்றுவல்ல பெரியாரைத் தேடிச் செல்லுவதற்குரிய ரயில் இல்லை, மோட்டார் இல்லை, ஆகாய விமானமில்லை, சீரான பாதை இல்லை, நேரான தபால் வசதியில்லை.

கையில் நிறைய பணமிருந்ததா? வறுமை வாக்களித்த துறவிக்குப் பணமேது?

தமிழ்ப்பணி செய்வதையே தன் வாழ்க்கைப் பெரு நோக்காகக் கொண்டவரா முனிவர்? இல்லை. அவரது வாழ்க்கை நோக்கம் சமயத் தொண்டு. மொழித் தொண் டெல்லாம் தமது சமயத்தொண்டு செய்து மீந்த ஒழிவு நேரத்திற்றான் கைகூடுவதாயிற்று.

எனவே முனிவர் வாழ்ந்த கால நிலையையும் அவர் தம் பொருளாதார நிலையையும் அறிந்தோரே அவரது சேவையின் உரிய பெருமையைச் சரியாய்த் தெரிந் தோராவர்.

மேகங்கள் படிந்துள்ள மலையானது தான் முன்பு குடித்த நீரையெல்லாம் உமிழ்ந்ததால் உண்டாகும் அருவிக்கு, வீரமாமுனிவர், தேம்பாவணியில் ஒரு உவமை கூறுகிறார். அந்த அருவியின் தன்மை, "படித்த நூலவை பயன்பட விரித்துரைப்பவர் போல்" இருக் கின்றதாம். எவ்வளவு பொருந்திய உவமை. இவ் வுவ மையின் உண்மைத் தன்மை முனிவரது வாழ்க்கையி லும் பொருந்தியுள்ளதைக் காண்போம்.

முனிவர் தமிழ் நூற்பொருட்களைக் கற்றுத்தெளிந் தார். அந்நூற்பொருட்களைப் பிறருக்கும் பயன்படும் படியாக, இலக்கணமாக, பெருங்காவியமாக, சிறு கவி தைகளாக, உரை நூலாக, விரித்துரைத்தார். நூல் வாயிலாகத் தமிழ் வளர்ச்சிக்குரியதாக முனிவர் செய்த தொண்டு அவர் தம் உள்ளம்போல் உயர்ந்தொன்றும்.

ஒரு மொழியினைக் கற்பாருக்கு அகராதியின் துணை பெரிதும் வேண்டற்பெறும். தமிழ் மொழியில் அமைந்த தொன்மை வாய்ந்த அகராதிகள் நிகண்டுகள் என்று பெயர் பெறும். அவற்றில் சொற்கள் அ, ஆ, இ, ஈ

என்ற அகராதி முறையாய் வைக்கப் பெறுமல், ஒரு பொருட் பன்மொழி, தெய்வப் பெயர்த் தொகுதி என்று இவ்வாறு தொகுக்கப் பெற்றிருப்பதோடு இவை கள் செய்யுளில் அமைந்துள. வீரமாமுனிவர், மேனுட்டு மொழிகளில் அமைந்தது போன்ற அகரா தியைத் தமிழ் மொழியில் தொகுத்துத் தந்தார். ஒரு பெயருக்குப்பல பொருள் உள்ளதைத் தொகுத்துப் பெய ரகராதி என்றும், ஒரு பொருளுக்குப் பல பெயருள்ள தைத் தொகுத்துப் பொருளகராதி என்றும், இரண்டு முதல் அநேகம் சேர்த்து ஒரு சொல்லாக வழங்குவதெல் லாம் தொகை அகராதி என்றும், ககரமுதல் னகர வீருக உள்ள பதினெட்டெழுத்தும் குறிலும் நெடிலு மாய் எதுகைப்பற்றிவரும்பதங்களெல்லாம்தொகுத்துத் தொடை யகராதி என்றும், நான்கு வகைகொண்டதாய் வீரமாமுனிவர் தொகுத்ததே சதுரகராதி என்னும் பெயர்கொண்டு விளங்குகின்றது.

இஃதன்றி அவரியற்றிய வேறு இரண்டு அகராதி கள் குறிப்பிடத் தகுந்தன. ஒன்று தமிழ்இலத்தீன் அகராதி. மற்றொன்று போர்த்துக்கீசியம் தமிழ் இலத்தீன் அகராதி. முன்னையது 9000 தமிழ்ச் சொற் களுக்கு இலத்தீன் மொழியில் பொருள் விளக்கங் கொண்டது. பின்னையது 4400 போர்த்துகேசிய மொழிகட்குத் தமிழிலும், இலத்தீனிலும் உரையினைக் கொண்டுள்ளது. இம்மூன்று கருவி நூற்களும் பிற நாட்டார் தமிழ் கற்பதற்கும், நம் நாட்டவர் போர்த்து கேசியமும் இலத்தீனும் கற்பதற்கும் பெருந்துணை புரிவன என்பது சொல்லாமல் அமையும்.

வீரமாமுனிவர் தமிழ் மொழிக்கு இயற்றிய இலக்கண நூற்கள் நான்கு. கொடுந்தமிழ் இலக்கணம், செந்தமிழ் இலக்கணம், கிளாவிஸ், தொன்னூல் விளக்கம் முதல் மூன்றையும் இலத்தின் மொழியில் எழுதியுள்ளார். இவற்றில் செந்தமிழ் இலக்கணத்தின் லத்தின் மூலத்தோடு பாபிங்டன் துரையவர்களின் ஆங்கில மொழி பெயர்ப்பு 1917-ல் திருச்சி ஜோசப் இண்டஸ்ட்ரியல் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பெற்றுளது.

செந்தமிழ் நாடாகிய பாண்டிய நாட்டை அடுத்திருந்த பன்னிரு நாடுகள் கொடுந் தமிழ் நாடுகள் என வழங்கப் பெற்றன. அப்பன்னிரு நாட்டவர் பேசும் தமிழும் கொடுந்தமிழ் என்று வழங்கப்பெற்றது. வீரமாமுனிவர் கொடுந்தமிழ் என்ற குறியிட்டால் வழக்காற்றுத் தமிழைக் குறிப்பிட்டுக் கொடுந்தமிழ் இலக்கணத்தில் வழக்கு மொழியாகிய தமிழுக்குரிய இலக்கணங் கூறுகிறார். செந்தமிழ் இலக்கண நூலில், ஆன்றோர் யாத்த நூல் வழக்கிலே காணப் பெறுபவை கட்கு அமைதிகளைக் கூறுகிறார். கிளாவிஸ் என்னும் நூலில் செய்யுள் இயற்றுதற்குரிய வரம்பு உணர்த்தப் பெறுகிறது.

தமிழில் வழங்கும் பிற இலக்கண நூற்களுக்கு இல்லாத சிறப்பு தொன்னூல் விளக்கத்திற்கு உண்டு. தொல்காப்பியத்திலுமில்லை, நன்னூலிலுமில்லை பஞ்ச இலக்கணங்கள். தொன்னூல் விளக்கத்திலோ, எழுத்து, சொல்? பொருள், யாப்பு, அணி ஆகிய ஐந்து பகுப்பிற்கும் ஒரு சேர இலக்கணங்கள் அமைந்துள. மேலும், இதன் பொருளதிகாரப் பகுதியில் தமிழ் மொழிக்கே புதுமையான சில அம்சங்கள் அடங்கியுள்ளன. அவற்

றில் ஒன்று வாக்கலங்காரம் (Rhetoric). மாணவர் எழுதுங் கட்டுரை தொடங்கிப் புலவர் பாடும் காப்பியம், புனையும் கதை வர்ணனை, நாவல், நாடகம் ஆகிய எல்லா நூல்களுக்கும், கோவிலில், பிரசங்க மேடையில், நியாயஸ்தலத்தில், சட்டசபையில் நிகழ்த்தப்படும் பிரசங்கங்கள் ஆகிய இவற்றிற்கும் பொருந்தும் இலக்கணங் கூறும் நூலை வாக்கலங்காரம் என்கிறோம் இந்த வாக்கலங்காரம் தொன்னூல் விளக்கத்தில் உளது.

வீரமாமுனிவர் உயர்ந்ததொரு மொழி நூற்புலவர். அத்துடன் கவி சொல்ல வல்ல சிறந்ததொரு காப்பியக் கவிஞர். இவரியற்றிய தேம்பாவணி என்ற இனிய செந்தமிழ்க் காப்பியம், 3615 விருத்தப் பாக்களைக் கொண்டதாக சேசுநாதரின் வளர்த்த தந்தை சூசையப்பரின் வரலாற்றை விரித்துக் கூறுகின்றது. திருத்தக்க தேவரின் சிந்தாமணியில் திளைத்தாடி, கம்பரின் காவிய நலங்களை யெல்லாம் கருத்தூன்றிக் கண்டு, காப்பியம்யாத்த பெருந்தகை, தம் முன்னோராகிய இவ்விரு பெரும் புலவர்களின் அரிய நடையினைப் பின்பற்றியதன்றி அவர்தம் பொருளையும் பல விடங்களில் பொன்னேபோல் போற்றிப் பயன் படுத்தியுள்ளார்.

இஃதன்றி நம் புலவர் இயற்றிய திருக்காவலூர்க் கலம்பகமும், கித்தேரியம்மாள் அம்மானையும் அறிஞர்க்கு நவில்தொறும் அறிவின்பம் பயப்பன. திருக்காவலூர்க் கலம்பகம் என்பது ஏலாக்குறிச்சி என்னுமிடத்தில் முனிவர் எடுத்த திருக்கோவிலில் அமைக்கப்பெற்ற மரியன்னையின் திருச்சுரூப மகிமையைப் பிரசித்தப்படுத்தும், பக்திச் சுவை மிக்கதொரு நூல். அத்தகையதே

கித்தேரியம்மாள் அம்மானையும். இஃது கி. பி. 130-ம் ஆண்டு போர்த்துக்கல் தேசத்தில் பொம்மேரு குன்றில் வேத சாட்சி முடிபெற்ற அர்ச். கித்தேரியம்மாளின் புனித சரிதையைக் கூறுவது.

"அடைக்கல நாயகியேல் வெண்கலிப்பா, அன்னை அழுங்கல் அந்தாதி, கருணாம்பரப் பதிகம், ஆகிய இவை களும் முனிவர் தங் கவித்திறனை நன்கு எடுத்துக் காட்டுவன.

வீரமாமுனிவரது உரை நடையில் மிகுதியாகப் பயிலப் பெறுவது பரமார்த்த குருவின் கதை என்ன லாம் இச்சிறு கதை, நகைச்சுவை நிரம்பியது தமிழ் கற்கப் புகுவார்க்குப் பயன்படும் அளவில், எளிய, தெளி வான நடையில் எழுதப் பெற்றுளது. இது பல ஐரோப் பிய மொழிகளில் பெயர்க்கப் பட்டுளது. தமிழ் நாட்டி லும் இதிலுள்ள சில சம்பவங்கள் யாவராலும் பழ மொழியாகப் பேசப்பெறும் பிரசித்தி பெற்றுள்ளன. வேத விளக்கம், வேதியர் ஒழுக்கம், லுத்தேர் இனத்து இயல்பு, பேதக மறுத்தல், ஆகிய இவை மத சம் பந்தமானவை; வீரமாமுனிவருடைய உரை நடை வள்ளன்மைக்கு எடுத்துக் காட்டாக இலங்குவன. பெஸ்கியரது உரை நடையிலே மிக வியப்பிற்குரிய "வேதியர் ஒழுக்கத்தை தமிழ் உரை நடை பயிலும் மாணவர்க்குரிய மேல் வரிச் சட்டமாக யான் கருது வேன்" என்பர் டாக்டர் ஜி. யு. போப்.

சுவாமி வீரமா முனிவரது தமிழ்த் தொண்டின் சிறப்பைப் பொருந்தக் கூறும் ஒரு புலவர் வாக்கோடு இதனை முடிக்கின்றேன்.

“பிங்கலமும் திவாகரமும் நிகண்டு தேடிப்
பேரலுப்புக் கொள்ளாத பெற்றி காண
இங்கெவரும் நினையாத பொழுதே பெஸ்கி
எழிலியதோர் அகராதி இயற்றித் தந்தான்
தங்குதடை யில்லாமல் எவரும் கற்பான்
சன்மார்க்க போதனைகள் தவறு தோங்க
அங்கனியும் நல்லமுதும் பாலும் தேனும்
அமைதருதேம் பாவணிநூல் அளித்தான் சிங்கம்
அந்தாதி மாலைஉலா வசன நூல்கள்
அம்மானை அருள்புலவர் ஆங்காங் குண்டு
பிந்தாத குணமுடைய அவரெல்லோரும்
பின்பற்று வழிவகைகள் பெய்த வாறு
சிந்தாத நெறிதெளிந்த இவனே முன்னால்
செப்பியநூல் அத்தனையும் செய்து வைத்தான்
எந்தாதை திருநாளைப் பெரு நாளாக
எவர்கொள்ளார் எவர்விள்ளார் இகத்தில் அம்மா?”



# திருவீங்கோய் மலை எழுபது

திருவீங்கோய்மலை எழுபது சிவபெருமானை வழுத்தும் ஓர் பக்தி நூல். யாண்டும் பக்திச் சுவையே நனி சொட்டச் சொட்டப் பாடப்பெற்ற இந்நூல் இயற்கை வனப்பை இனிது விளக்கும் தன்மையது. இதனாசிரியர் நக்கீரர் சங்ககாலப் புலவர்; மதுரை வாசி; கணக்காயர் மகன்; சைவவேளாளர்; புலவர் பெருமக்களால் நன்கு மதிக்கப்பெற்றவர். புலவுத் துறந்த பொய்யா நோன்பினர் என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் இவரை வியந்து பாராட்டுவர். திருவிளையாடல் புராணத்திலும், சீகாளத்திப் புராணத்திலும் சற்று வேறுபாடுடன் காணப்பெறும். சிவபெருமானோடு இவர் வாதிட்ட வரலாறு எவ்வாறிருப்பினும் இவர் தம் புலமை மாட்சி இவர் அருளிய பாக்களிலும், உரையிலும் தெள்ளத் தெளிய மிளிர்வதொன்றும். புணர்ந்துரையிலும் பொருளோடு புணர்ந்த மெய்யுரையே நாடும் இவர் தம் மேதையை இவருடைய நூற்கள் நன்கு ஓதுவன; இயற்கையில் இவருக்குள்ள ஈடுபாட்டை எடுத்து இயம்புவன.

நக்கீரர் இயற்கையோடு உறவுகொண்டார் என்பது உண்மை. அவர் உறவு இயற்கையை அநுபவித்தல் என்ற வெற்றுறவு ஒன்றே என்று கருதுதல் தகாது. சில புலவர்கள் இயற்கையைப் பாடுவதன் மூலம் உணர்ச்சி குன்றிக்கிடக்கும் சமுதாயத்தை எழச்செய்து அதற்குப்பெருமகிழ்வாம்புத்துணர்ச்சியைக்கொணர்ந்து கொட்டலாம் என்ற எண்ணமுடையவர்கள். இயற்கை எழில் ஒன்றே மனிதரிடையேயுள்ள சீர்கேட்டைத் தீர்க்

கும் நன்மருந்து என்று கருதுபவர்கள்; பாக்களிலெல்லாம் பன்னிப் பன்னி இயற்கையையே பாடுவார்கள். சாந்த இரவும், உவகையோடு வரும் உதயகாலையும், மானிலப் பரப்பும் மலை, நதி, கடலும் இப்புலவர் தம் உள்ளுணர்வைத் தூண்ட குழலோசைக்கும் யாழின் தொனிக்கும் பொருந்தப் பாடும் இயற்கைப் புலவர்கள் இலக்கிய வரிசையில் ஒரு அலாதி இனத்தைச் சேர்ந்தவர்கள்.

இந்த இனத்தவரல்லர் நக்கீரர். நக்கீரர் பாக்களில் பக்திச் சுவையே பிரதானமாக ஓடிக்கொண்டிருக்கிறது. நம் புலவர் பரமனைப் பாடும் பணியையே தம் வாழ்வின் பெரும் பணியாகக் கொண்டவர். அழகுக்கு அழகாக விளங்கும் ஆண்டவனைப் பாடுகின்ற அடிப்படையில் இயற்கை உறவு கிளைதது எழுதுகின்றது நம் புலவர் பெருந்தகைக்கு.

இந்த முறை, நம் தமிழ்ப் புலவர்கள் பொதுவாக பொருந்த உரிமைகொள்ளும்முறை என்க. இறைவனைத் தான் பாடுவார்கள். அவன் பெரும் புகழைப் பாராட்டுவதைத்தான் தமது குறிக்கோளாகக் கொள்ளுவார்கள். அந்தப் புகழுரையிலே வீணை வரும், திங்கள் வரும், தென்றல் வரும், இளவேனில் வரும்.

"மாசில் வீணையும், மாலை மதியமும்,
வீசு தென்றலும், வீங்கிளவேனிலும்,
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே."

இறைவன் துதியில் வந்து கலந்துள்ள இயற்கைச் சித்திரத்தின் அழகுதான் என்னே! பக்தியை அடிப்

படையாகக் கொண்ட இத்தகைய இயற்கைப் பாடல்கள் தமிழில் எண்ணிறந்தன.

நக்கீரரும் பக்தியை அடிப்படையாகக் கொண்டு கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்புடைய இயற்கையைப் பாடும் எழிலுடைய புலவர்.

இவர் பாடிய திருவீங்கோய் மலை எழுபது பக்தியை அடிப்படையாகக் கொண்டது. சிவபெருமானிடத்து ஆசிரியர்க்குள்ள அளவிடற்கரிய அன்புப் பெருக்கை அள்ளியிறைப்பது. சைவத் திருமுறையில் சேர்க்கப் பெறுதற்குரிய சீர்த்தியுடையது. 11-ம் திருமுறையில் வருவதொன்று. எழுபது பாக்களும் கிடைக்கப் பெறவில்லையாயினும் கிடைக்கப்பெற்ற ஐம்பத்தைந்து பாக்களும் இறை அன்பையும், இயற்கை எழிலையும் எடுத்துக் காட்டும் எழுத்தோவியங்கள் எனத் தக்க முழுமணிப் பாக்களாகும்.

திருவீங்கோய் மலை திருச்சிராப்பள்ளி ஜில்லாவில், குளித்தலைக்கு வடமேற்கே இரண்டு மைல் தொலைவிலுள்ளது. குன்றின் மீதிருக்கின்ற கோவிலில் எழுந்தருளியுள்ள இறை மரகத அகில ஈஸ்வரர்; அம்மை மரகதவல்லியம்மை; தீர்த்தம் அகஸ்தியர் தீர்த்தம்; தல விருக்ஷம் புளியவிருக்ஷம். அகஸ்திய முனிவர் பூசிப்பதற்கு சமயம் வாய்க்காமல் ஈ வடிவாய்ச்சென்று பூசித்ததாக இம்மலையைப் பற்றிய புராணம் கூறும்.

இம்மலைமீதுள்ள சிவலிங்கம் பச்சை நிறமுடையதாகக் காணப்படுகிறது. இதைக் கருதியே இத்தலத்துக்குரிய இறைவனை மரகத அகில ஈஸ்வரர் என

அழைத்தனர். மணிவாசகப் பெருந்தகையும் இப்பச்சை நிற அழகில் ஈடுபட்டே "ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்" என்றனர் போலும்.

திருவீங்கோய் மலை யெழுபது மூலம் நக்கீரர் எழுதிக் காட்டும் இயற்கை வளம் பொருந்திய எழிற் சித்திரங்கள் சிலவற்றைக் காண்போம். அந்த மலையிடத்தே வாழும் குறமகளிர் தம் ஜீவகாருண்ய நிலைமையும், அம்மலை நிலத்தின் வளத்தையும் சொல்ல விழையும் ஆசிரியர்,

"அந்த இளம் ஆந்தழுவி ஆயம் பிரிந்ததற்குக்
கொந்தவிழ்தேன் தோய்த்தூட்டுங் குறமகளிர்—சந்தின்
இலைவளைக்கை யால்கொடுக்கும் ஈங்கோயே மேரு
மலைவளைக்கை வில்லி மலை"

என்று புனைந்துரை செய்துள்ளார். மேரு மலையை வளைத்து கையிலே தாங்கிய வில்லேந்தியாகிய சிவபெருமான், விரும்பி உறைதற்குரிய திருவீங்கோய் மலை ஓர் அழகிய காட்சியையுடையது. என்ன அழகிய காட்சி அம்மலைச் சாரலில் சஞ்சரிக்கும் பசுக்கூட்டம். அப்பசுக் கூட்டத்திலிருந்து இளங்கன்று ஒன்று பிரிய நேர்ந்தது. அது பிரிய நேர்ந்த காலத்தும் அதற்குத் துன்பம் நேரவில்லை. அம்மலையினிடத்து வாழ்கின்ற இளம்பெண்களாகிய குறமகளிர் மிகுந்த ஜீவகாருண்யம் உடையவர்கள். இவர்கள் ஆயம் பிரிந்த கன்றை நன்கு பேணுவார்கள். மலையில் தேன் நிறையக் கிடைக்கும். கொத்தாக விளங்கும் வளமுடைய மலர்கள் தாமாகவே தேனைச் சொரியும். இத்தேனிலே சந்தன மரத்தின் நறு இலையைத் தோய்த்து அவ்விளங்கன்றுக்கு அம்மகளிர் அளிப்பார்களாம். அவ்வளைக்கையால் பரிவோடு உணவு

கொடுக்கும் அம்மகளிர் கருணை இருந்தவாறென்ன! அம்மலை நிலத்தின் செழுமைதான் என்ன!

இன்னுமொரு வகையில் அம்மலையின் செழுமையைப் புலவர் புனைந்துரைக்கும் பான்மை வெகு அழகாக அமைந்துள்ளது. அக்குன்றின்கண் வாழ்கின்ற, பவளம் போலும் வாயினையுடைய, இளமகளிர் தம் அன்னையரிடம் அம்மனையாடும் பொருட்டாக சிவந்த பவளத்திற்காக அரும்பாடுபட்டு முயல வேண்டியதில்லை. வெகு எளிதில் அவர்களுக்கு அது கிடைக்கும். அன்னையர் கொம்புகொண்டு நிலத்தைக் கிண்டிக் கிளறுகிறார்கள். கிளறி எளிதில் கொடுக்கிறார்கள் அப்பவளத்தை,

"அமபவள வாய் மகளிர் அமமனைக்குத் தம்மனையர்
செம்பவளந் தா என்னச் சீர்க்குறத்தி—கொம்பின்
இறுதலையி னுற்கிளைக்கும் ஈங்கோயே நம்மேல்
மறுதலைநோய் தீர்ப்பான் மலை."

அம்மலையின் கண்ணே மான்கள் அங்குமிங்கும் திரிந்து விளையாட்டயரும். அதில் ஓர் மான் வேடன் கண்ணில் படுகிறது. அம்பைத் தொடுக்கின்றான். எய்யத் தொடங்குகின்றான். எய்வதுதானே? ஏன் இந்தத் தயக்கம்? அவ்வேளை அவ்வழியே ஒரு குறத்தி செல்கிறாள். அவள் விழிகளும் மானின் மருள் விழிகளும் ஒன்றாகத் தோன்றுகின்றன. இந்த வேளையில் அம்பு எய்தல் உசிதமல்லவென்று வேடுவன் கருதுவது பொருத்தமுடையதுதான்.

"எய்யத் தொடுத்தோன் குறத்திநோக் கேற்றதென
கையில் கணைகளைந்து கன்னிமான்—பையப்போ
என்கின்ற பாவனைசெய் ஈங்கோயே தூங்கெயில்கள்
சென்றன்று வென்றான் சிலம்பு."

இன்னொரு இயற்கைச் சித்திரத்தைக் காண்போம். ஈங்கோய் மலை பவளங்களுக்குப் பெயர் பெற்றது. பன்றிகளால் கிளறி எடுக்கப் பெற்ற செந்நிறப் பவளங்கள் தோற்றத்திற்கு நெருப்புப் போன்றிருக்கின்றன வாம். நெருப்பைக் கண்டால்தான் யானை அஞ்சுமே. இப்பவள நிறத்தை உண்மை நெருப்பென எண்ணிய யானைகள் அஞ்சி ஓடுகின்றனவாம். இவ்வளவு பெரிய விலங்குகள் உண்மையை உள்ளவாறு அறியாமல் ஒன்றை மற்றொன்றாகக் கண்டு அறிவு மயக்கத்தால் ஓடுகின்றனவேயென அண்மையிலுள்ள சிறு முல்லை மலர்கள் நகுகின்றனவாம். இவ்வளவு நாடகமும் நடை பெறுகின்றதே திருவீங்கோய் மலையில்.

"ஏனம் கிளைத்த இனப்பவள மாமணிகள்
கானல் எரிப்பக் கண்டஞ்சி—யானை
இனம்பிரிய முல்லைநகும் ஈங்கோயே நம்மேல்
வினையிரியச் சென்றுகந்தான் வெற்பு."

அம்மலையின் கண்ணுள்ள ஒரு குரங்கின் செயலைப் பாருங்கள். மலையில் கனிகளுக்கோ யாதொரு குறைவுமில்லை. கண்ணிற் கண்ட கனிகளை அது உண்கின்றது. குளிர்ச்சி பெறுதற்கு குளிர்ந்த சுனை நீரையும் உண்டு பார்க்கிறது. இன்னும் குளிர்ச்சி பெறவில்லை. சரி, இனி மழை மேகத்தைக் கீறிக் குளிர்ந்த மழைத் துளியைப் பருகினால்தான் உடல் குளிரும் என்ற முடிவிற்கு வந்து விடுகின்றது.

"கண்ட கனிநுகர்ந்த மந்தி கருஞ்சுனைநீர்
உண்டு குளிர்ந்திலவென் றோடிப்போய்—கொண்டல்
இறைகீறி வாய்மடுக்கும் ஈங்கோயே நான்கு
மறைக்கீறு கண்டான் மலை."

மலையோ மிக உயர்ந்துள்ளது. உண்மையில் உயர்ந்ததில்லையென்றாலும், கவிஞர் உள்ளம்போல அது உயர்ந்திருப்பதாக நம்மை எண்ணவைப்பது இயல்புதானே. விண்ணளாவ மலை யுயர்ந்துளது. எனவே சந்திர சூரியர்கள் அண்மையில் இருப்பனவாக ஆங்குள்ள மக்கள் கருதுவதற்கு இடமாயிற்று. நிம்மதி யான இரவு வேளை. ஒரு குரங்குக்கு எப்படியாவது சந்திரனைத் தடவிப் பிடித்தல் வேண்டும் என்ற ஆசை உள்ளத்தில் உதயமாயிற்று. அங்கேயுள்ள மூங்கிலின்மீது விரைந்தேறி அதன் நுனி சென்றது. அங்கிருந்து சந்திரனைத் தடவுவதற்காகத் தன் கையை நீட்டியது. இத்தகைய அருமையான இயற்கை நிகழ்ச்சிக்கு இடமாயது திருவீங்கோய் மலை யென்று பாடுகின்றார் நக்கீரர்.

"வான மதி தடவ லுற்ற இளமந்தி
கான முதுவேயின் கண்ணேறி—ஊனம்
இருந்துயரக் கைநீட்டு மீங்கோயே நங்கள்
வருந்துயரம் தீர்ப்பான் மலை."

திருவீங்கோய் மலையில் வாழும் அஃறிணை உயிர்களிடையே ஒன்றிற்கொன்று எத்துணைக் கனிவு, எத்துணை சோதர நேயம் என்பதைப் பாருங்கள் இனிவரும் செய்யுளில்.

" வழுவிதழ் காந்தள்மேல் வண்டிருப்ப ஒண்பூ
முழுகிய தென்றஞ்சி முதுமந்தி—பழகி
எழுந்தெழுந்து கைநெரிக்கும் ஈங்கோயே திங்கள்
கொழுந்தெழுந்த செஞ்சடையான் குன்று."

காந்தள் செங்காந்தள். சிவந்த காந்தள் மலர்மேல் வண்டு சார்ந்திருக்கின்றது. இதைக் கண்ட ஒரு முதிய மந்தி "பாவம், இந்த வண்டு நெருப்பினிடையே முழுகி

உள்ளதே என்று கவலை கொண்டு கையை நெரிக்கின்றது. வழுகும் தன்மை உடையதாக உள்ளது காந்தள் மலர். வண்டு வழுகி வீழ வீழ மீண்டும் மீண்டும் அம்மலரின் கண்ணே சார்ந்து சார்ந்து அமர்கின்றது. அப்படி ஒவ்வொரு முறையும் வழுகி எழுந்து மீண்டும் சாரும்போது குரங்கு பரிதாப உணர்ச்சியால் உந்தப் பெற்று எழுந்து எழுந்து கையை நெரிக்கின்றது

"வழுகிதள் காந்தள் மேல் வண்டிருப்ப ஒண்டீ
முழுகிய தென்றஞ்சி முதுமந்தி—பழகி
எழுந்தெழுந்து கைநெரிக்கும் ஈங்கோயே திங்கள்
கொழுந்தெழுந்த செஞ்சடையான் குன்று"

அஃறிணை உயிர்களிடையே இத்தனை ஈடுபாடு என்றால் உயர்திணை உயிராம் மக்களுக்குள்ளே, அதுவும் கணவன் மனைவி இவர் தமக்குள்ளே இருப்பதான மெய்யன்பை என்னென்பது? அன்பென்றால் வெறும் சொல்லன்பு அன்று. செயலிலே அன்பு வெளியிற் சென்ற கணவன் வீடு திரும்பும் வேளை அவனுக்கு நல் லுணவு அளித்தல் வேண்டுமே என்ற உள்ளக் கிளர்ச்சியால் தினையரிசியை மாவாக இடிக்கின்றாள் இல்லாள். வீடு வரும் கணவன் சிறந்த தேனைக் கொண்டு வருகின்றான். தேனையும், தினைமாவையும் கலந்து தன் கணவனுக்குக் கொடுக்கிறாள் : தானும் உண்கின்றாள் இல்லாள். இதுதான் அம்மலை வாழ்நர்தம் குடியியல்பு என்பதை,

"கருங்களிற்றின் வெண்கொம்பால் கல்லுரல்வாய் நல்லார்
பெருந்தினை வெண்பிண்டி இடிப்ப—வருங்குறவன்
கைக்கொணரும் செந்தேன் கலந்துண்ணும் ஈங்கோயே
மைக்கொணரும் கண்டன் மலை"

என்னும் நக்கீரர் கூற்றால் அறிகின்றோம்.



## டாக்டர் வின்ஸ்லோ

நம் நாட்டில் ஆங்கிலப் பயிற்சி இப்போதுள்ள அளவு அந்நாளில் பரவி இருக்கவில்லை. அந்நாளில் இங்கு வந்துள்ள அந்நியநாட்டு மக்கள் நம் நாட்டு மக்களோடு நன்கு பழகுவதற்கு நமது மொழிகளைக் கற்க வேண்டியதாயிற்று. அங்ஙனம் கற்ற ஐரோப்பியர்களுள்ளே, வியாபாரிகள் அரசியல் அதிகாரிகள், மத போதகர்கள் என்றிவ்வாறான பல திறத்தினர் இருந்தனர்.

தமிழ் நாட்டிற்கு வந்து கற்ற மேலை நாட்டினர் குழுவினுள்ளேயும் இம் முத்திறத்தவரையும் காணலாம். வியாபாரிகளும், அரசியல் அதிகாரிகளும் ஏதோ சொற்பமாக மொழி அறிவு பெற்றிருந்தனர் ஆனால் மதபோதகர்களோ தமிழ் மொழியினையும் தமிழ் கிளை மொழிகளையும் விரிவாகவும் ஆழமாகவும் கற்றனர்.

இத்தகைய சமய அறிஞர்களுள்ளே பிராட்டஸ்டன்ட் மதப் பிரசாரகரான டாக்டர் வின்ஸ்லோ என்பவரும் ஒருவர். இவர் அமெரிக்க நாட்டினர்.

இவர் சென்னை சிந்தாதரிப்பேட்டையில் சமயத் தொண்டு செய்துகொண்டிருந்த காலம் 1862ம் ஆண்டினை அடுத்தது. தாம் செய்யும் சமயத் தொண்டிற்கும், தம் போன்ற போதகர்களுடைய அரிய பணிக்கும் மொழிப் பயிற்சி மிகமிக இன்றியமையாதது என்பதைத் தீர உணர்ந்தார் டாக்டர் வின்ஸ்லோ. தமிழ் நாட்டுப் பெரும் புலவர் சிலரைத் துணைக்கொண்டு தமிழ்

மொழிப் பயிற்சியில் தலைப்பட்டு அதில் தக்க புலமையும் கைவரப் பெற்றார்.

தமிழ் நாட்டிற்குரியரல்லாத அயல் நாட்டினர், அதிலும் தமிழ் மொழியோடு சிறிதும் தொடர்பில்லாத ஐரோப்பிய மொழியாளர், ஆங்கிலம் அறிந்த மக்கள் தமிழை இலகுவில் கற்றுக் கொள்வதற்காக தமிழ்—ஆங்கில அகராதி தொகுக்கும் ஒரு பெரும் பணியை எண்ணித் துணிந்து அதனைத் தொகுக்கும் அலுவலை விழைந்தார். அப்பணி இவரை எதிர்கொண்டு வந்ததை இவர் தம் நற்பேறாகக் கருதினார். இச்சீரிய அலுவலில் இவர் தமக்குத் துணை நின்ற தமிழ்ப் பெரியார்களில் விசாகப் பெருமாள் ஐயர் அவர்கள் சிறந்த சிந்தனையாளர். மாகாணக் கல்லூரியில் தலைமைத் தமிழ்ப் பண்டிதராகத் திகழ்ந்தவர். சிதம்பரம் பிள்ளை என்பவர் சான்றுவேலி என்ற ஊரினர். தாமே ஒரு ஆங்கிலத் தமிழ் அகராதி தொகுத்தும் பயிற்சி பெற்றவர். தனித் தமிழ் உணர்ச்சி மிகுந்தவர். இவர்களே யன்றி ராமானுஜக் கவிராயர், வீராசாமிச் செட்டியார், ஆப்ரஹாம் ஆலின் ஆகிய இம்மூன்று வல்லுநர்களும் வின்ஸ்லோ அவர்கள் ஈடுபட்டிருந்த வியத்தகு சேவையில் பக்கத் துணையா யிருந்தவர்கள்.

அகராதி தொகுக்கும் அலுவல் எத்துணை முக்கியத்வம் வாய்ந்தது, அதனால் ஏற்பட விருக்கும் பயன் எவ்வளவு விரிந்தது என்பவற்றை டாக்டர் வின்ஸ்லோ வெகு நன்றாய் அறிந்திருந்தார். எனவேதான் இப்பணியில் மேற்குறித்த வித்தகர்களுடைய தகைசான்ற துணையை நாடிப் பெற்றுக்கொண்டார். அத்துடன் தமக்கு முற்பட்டுத் தமிழ்த் துறை

யில் தோய்ந்து கண்ட அனுபவத்தால் சதுரகராதி தந்த சுவாமி வீரமா முனிவர் சேகரித்த குறிப்புகளைத் துணைக் கொண்டனர். இவர் தம் அகராதிக்கு வீரமா முனிவர் தந்த சுவடிகளே அடிப்படை என்பதையும் அகராதி வெளியீட்டில் விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளார்.

ஏற்கெனவே தொகுக்கப் பெற்றிருந்த பிற அகராதிகளில் அமைந்திராத சில சிறப்பியல்புகளை வின்ஸ்லோ அகராதியில் காண்கிறோம். 30000 சொற்களைக் கொண்ட இந்த அகராதி வழக்கு மொழியும், ஆன்றோரால் ஆக்கப்பெற்ற நூல் மொழியும் தன்னகத்தே அடக்கியது. வான நூற்பகுதி, சோதிடப் பகுதி, புராணப் பகுதி, தாவரப் பகுதி, பிறசாத்திரப் பகுதி ஆகிய இப் பகுதிகளிலெல்லாம் விளக்கம் தருவதாய சொற்கள், சொற்பொருட்கள்ச் செறியப் பெற்றது. உத்தியோக வழக்கிலே ஆளப்பெறும் சொற்களுக்கும் விளக்கம் தருவது. அன்றியும் ஆசிரியன்மார்கள், புலவர்கள், வீரர்கள், கடவுளர்கள் ஆகிய இவர்களின் பெயர்களை யும் கொண்டது. தமிழ் மக்களின் தத்துவம், சமயம், பழக்க வழக்கங்கள் ஆகிய இவற்றிற்கெல்லாம் சுருக்க மான குறிப்புகளை உடையது.

டாக்டர் வின்ஸ்லோ தமது அகராதிக்கு வகுத்துள்ள அரிய முன்னுரையில் தமிழ் மொழியைப் பற்றிய சில உயர்வான கருத்துக்களைத் தமிழ் அன்பர்களின் உள்ளத்தை ஈர்க்கின்ற வகையில் எழுதிச் செல்வர். உலக மொழிகளை ஆரியம் செமிடிக், துரேனியம் என்ற முப் பெரும்குடும்பமாக வகுத்துத் தமிழினை துரேனியக் குடும்பத்தினைச் சார்ந்ததாக பேராசிரியர் மாக்ஸ்முல்லர் குறிப் பிட்டதைச் சுட்டியும் டாக்டர் கால்டுவேலர் தமிழினைச்

சித்திய குடும்பத்தைச் சார்ந்ததாக அறிவிப்பதைத் தொட்டுக் காட்டியும் இந்த இருபெரும் ஆசிரியர்களின் வயத்தராகாது தமிழ் மொழியின் வேர்ச்சொற்களை ஆராய்ந்து அதுவே மூல மொழியாதல் வேண்டும் என்று குறிப்பிடுதல் வின்ஸ்லோ அவர்களுடைய நடுநிலை பிறழாத நல்லுணர்ச்சியை நன்கு தெரிவிப்பதாகும். தமிழின் தந்தை எனப்பெறும் அகஸ்தியரைப்பற்றி குறிக்கின்ற காலத்து அவர் தாமே தமிழை உண்டுபண்ணியவர் என்று நாம் எண்ணுதற்கில்லை என்று தெளிவுறக் கூறுவர். எழுத்து சுவடி என்ற தூய செந்தமிழ்ச் சொற்களின் பழைமையினை இதற்குச் சான்றாக நிறுவுவர்.

"தமிழ் இழிந்த மொழியன்று. ஆங்கிலத்தின் பிரதம அடிப்படையானது. எழுத்துக்களை பெறுவதற்கு முன்னரே தமிழ் ஒரு உயர்ந்த தெளிந்த மொழியாக இரா நின்றது. அதன் பெயரே இனிமையைத் தெரிவிக்கின்றது'' என்கிறார் வின்ஸ்லோ. தமிழ் மொழியிடத்து அவர் கொண்ட, உண்மையை அடிப்படையாகக் கொண்ட, உணர்ச்சி வெள்ளத்தை இச்சொற்கள் ஒருவாறு வெளிப்படுத்துகின்றன.

பிற மொழியின் துணையின்றித் தனித்தியங்கிய தமிழ் மொழியின் தொன்மை வாய்ந்த தன்மையைப் பாராட்டும் அறிஞர் வின்ஸ்லோ, சேர சோழ பாண்டியரான முடியுடை வேந்தர்கள் தமிழ் வளர்த்த செந்நெறியைச் சிறப்பாகக் குறிக்கின்றார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் இயற்றிய பெருநூற்களின் புகழை உள்ளவாறு ஓதுகின்றார். தமிழ் செய்யுள் நிலையில் கிரேக்க மொழியைக் காட்டிலும் விளக்கம் பெற்றதாயும் திட்ப

நுட்பம் வாய்ந்ததாயும் இலங்குகின்றது என்பது அவர் கருத்து. வழக்கு மொழியிலும் நூல் மொழியிலும் இலத்தீன் பாஷையில் உள்ளதைக் காட்டிலும் ஏராளமான சொற்களைக் கொண்டதென்பதும் அவர் கருத்தே என்க.

தமிழ் தான் இயங்கும் ஆற்றிலே ஆங்கிலத்தை ஜெர்மன் மொழியை நிகர்த்து விளங்குகின்றது என்பர் வின்ஸ்லோ. செய்யுள் நடை நன்கு கைவரப் பெற்ற தமிழர் உரை நடை சரிவர எழுதத் தெரியாத நிலையில் இருக்கின்றனர் என்று அறிஞர் வின்ஸ்லோ கூறுவது அவர் காலத்துக்குப் பொருந்துவதன்றி இக்காலத்திற்குப் பொருந்தாது என்பது நாம் நன்கு அறிந்ததே.

டாக்டர் வின்ஸ்லோ தொகுத்த அகராதிக்கு முற்பட்ட சிறந்ததொரு அகராதி டாக்டர் ராட்லர் என்பவரால் தொகுக்கப் பெற்றது. அதன் சிறப்பினை டாக்டர் வின்ஸ்லோ அவர்களே ஏற்றுக்கொள்கிறார்கள். எனினும் அது அத்துணை போதிய அளவில் சொற்களைக் கொண்டதாயில்லை என்பது ஒரு குறை. சோதிட புராண விளக்கங்களும் அதில் இல்லை. சாஸ்திரச் சொற்களுக்குரிய பொருளும் காணப்பெறுமாறு இல்லை. டாக்டர் ராட்லரின் அகராதியில் தென் தமிழ் நாட்டில் வழங்கும் சொற்களே காணப்படும். ஆனால் டாக்டர் வின்ஸ்லோ அகராதியிலோ இலங்கையில் வழங்கும் சொற்களும் இடம் பெறுகின்றன.

டாக்டர் ராட்லர் அகராதியின் எந்தப் பகுதியும் அச்சேறுவதற்கு முன்பே வின்ஸ்லோ அகராதியின் வேலை தொடங்கப் பெற்றது. ஆனால் வேலையைத்

தொடங்கியவர் வின்ஸ்லோ அல்லர். இந்த அலுவல் யாழ்ப்பாணக் கிறிஸ்துவ சபையைச் சார்ந்த நைட் என்பவரால் தொடங்கப் பெற்றது. இதற்குத் துணை நின்றவர் திரு. கபிரியேல் பெரைரா. இவர் யாழ்ப்பாணத்துத் தமிழ் அறிஞர். போதக அலுவலில் ஈடுபட்டிருந்தவர். இவர்கள் இருவரும் சேர்ந்து செய்த திட்டத்தின்படி ஆங்கிலத் தமிழ் அகராதியோடு, தமிழ் ஆங்கில அகராதியும் தமிழ்த் தொகை அகராதியும் இடம் பெற்றிருந்தன. நைட் நீர்க்கமான தமிழ் அறிஞர். இந்த வெளியீடுகளுக்கு வேண்டும் நூற் குறிப்புகள் யாவும் காரத்துடன் சேர்க்கப் பெற்றன. இந்த அலுவலில் நைட்டுக்கு உதவி செய்தவர் பீட்டர் பெர்சிவல். யாழ்ப்பாண நாட்டுப் பிற தமிழறிஞர்களும் பேருதவி செய்தனர். நான்கு ஐந்து ஆண்டுகள் நூற் குறிப்புகள் சேகரிக்கப் பெற்றன. இதற்குள் நைட் இங்கிலாந்து சென்றமையாலும் இதனை அடுத்து இலங்கை வந்து அவர் இறந்துபோனமையாலும் வேலை நின்றது.

இதுகாறும் சேகரிக்கப் பெற்ற குறிப்புக்கள் யாழ்ப்பாண அமெரிக்க மிஷனரிகள் வசமாயிற்று. அவர்கள் இக்குறிப்புக்களைச் சேகரித்தற்கான பணச்செலவுசெய்தவர்கள். இந்தக் குறிப்புக்களிலிருந்தே லெவி ஸ்பாடிலிங் என்பார் அகராதி வகுக்க உழைத்தார். அவருக்கு உதவியாக சாமுவேல் அட்சிங்ஸ் 1847-ல் சென்னைக்கு வர சென்னையில் அகராதி அலுவல் தொடர்ந்து நடைபெறுவதாயிற்று. ஸ்பாடிலிங் என்பாரும் அட்சிங்ஸ் என்பாரும் ஏற்றுச்செய்ய விருந்தது சிறிய அளவினதொரு அகராதியே என்றாலும், இந்த அலுவலை முற்

ருக முடிக்க இயலவில்லை. அட்சிங்ஸ் நலமின்மையால் சொந்த நாட்டிற்குத் திரும்ப வேண்டியதாயிற்று.

இவ்வேளையில் தான் அகராதி அலுவலை ஒப்புக் கொண்டார் டாக்டர் வின்ஸ்லோ. இது வரைக்கும் கிடைக்கப் பெற்ற விஷயங்கள் அனைத்தும் அவரிடம் ஒப்புவிக்கப் பெற்றன. விரிந்த முறையில் அகராதி தொகுக்கக் கருதி, அச்சுப் பிழையின்றி அழகான முறை யில் அந்த ஆங்கிலத் தமிழ் அகராதி வெளியிடுவதற் கான செயலில் அத்தனையும் செய்யத் துணிந்தார். சில ஆண்டுகளில் இவற்றைச் செய்து முடித்தார்.

எடுத்துக்கொண்ட அலுவல் முடிதற்கு இடையே சில தவிர்க்க ஒண்ணாத தடைகள் ஏற்பட்டன. இவற்றை அவர் சொல்லக் கேட்போம். "வேலை தொடங்க உண்டான தாமதத்திற்கான காரணங்களை யும், அது நிறைவுறுதற் கிடையே ஏற்பட்ட தடைகளை யும் எடுத்துச் சொல்லுதல் அநாவசியம். என்றாலும் தொடங்கிய காலத்துக்கும் முற்ற முடித்த காலத் திற்கும் மிகுந்த இடையீடு ஏற்பட்டது. விளக்க இரண்டொரு சந்தர்ப்பங்களை எடுத்துக் காட்டலாம். ஒரு வேத போதகர் கோவிலையும் ஆங்கிலப் பள்ளிக் கூடத்தையும் அநேக தமிழ்ப் பள்ளிக்கூடங்களையும் நிர்வகித்து நடத்தும் பொறுப்புகளோடு இலக்கியத் துறையில் எவ்வளவு முக்கியமான பணியை ஏற்றிருந் தாலும் அதற்குப் போதிய நேரங்கொடுக்க இயலாது என்பது வெளிப்படை. இதன்றி மிஷன் செயலாளர், மிஷன்களின் பொக்கிஷதாரி என்ற இருபெரும் பொறுப்பு வாய்ந்த அலுவல்களோடு வேதாகமத்தைத்

தமிழில் மொழி பெயர்க்கும் பணியையும் நிர்வகிக்க வேண்டியிருந்தது.”

டாக்டர் வின்ஸ்லோ அகராதி தொகுக்கும் இப் பெரும் பணியைத் தமது போதக அலுவலில் ஒரு பகுதி என்று கருதிச் செய்தார். வேத போதகர்கள் தமிழ் அறிவு பெறுதற்குரிய வழி செய்யவே இதனை ஆக்கினர். முன்னுரையில் இந்த நன்னோக்கம் ஒன்றினையே விதந்துரைக்கின்றனர்.

வேத போதகர்களுக்கு உதவும் ஒரு குறிப்பிட்ட நோக்கத்தோடு தொகுக்கப் பெற்ற இந்த அகராதி எவ்வளவு சீரிய முறையில் செய்யப் பெற்றுள்ளது எனில் இது தற்காலத்தில் அந்நியர்க்கு மட்டுமன்றி உள் நாட்டவரிலும் உயர்ந்த தமிழறிவுபெற விழையும் நன் மாணக்கர்க்கெல்லாம் நல்ல பயனைத்தந்து நிற்கின்றது.

அகராதி தொகுத்து அதன் மூலமாகத் தமிழ் வளர்ச்சிக்குப் பெருந்துணை செய்த டாக்டர் வின்ஸ்லோவின் வியத்தகு சேவையைத் தமிழ் உலகம் மறவாது என்பது திண்ணம்.



## போப் ஐயர்

நமது நாட்டில் போப் ஐயர் என்ற பெயருடன் புகழ்ந்தேத்தப்பெறும் ஜி. யு. போப் அவர்கள், வட அமெரிக்காவிலுள்ள நோவா ஸ்கோஷியா என்னும் மாகாணத்தில் வணிகத்தில் ஈடுபட்டிருந்த ஒரு ஆங்கில வர்த்தகருடைய அருமை மைந்தனூர் ஆவர்.

இவர் பிறந்தது 1820-ம் ஆண்டில். "இருவேறு உலகத்து இயற்கை திருவேறு தெள்ளியர் ஆதலும் வேறு" என்ற வள்ளுவர் வாக்கால் பொருளும் அறிவும் பொருந்தி அமைதலின் அருமையை உணர்கின்ருேம். அருமையை உணர்கின்ருேமே யன்றி அது அமையாத தொன்று என்று கொள்கின்ருேமில்லை. பொருளும் அறிவும் பொருந்த வாழ்ந்த பெருந்தகையாரைக்காணில் பெருமகிழ்வு கொள்கின்ருேம். அவர்கள் தனிச் சிறப் பிற்குரியவராய்த் திகழ்கின்றனர். அத்தகையோரில் ஒருவரே ஜி. யு. போப்.

இளைஞர் போப்பிடம் பொருட் செல்வத்தோடு கலைச்செல்வமும் கர்த்தன் அருட்செல்வமும் பொருந்தி யிருந்தன. 19-ம் ஆண்டுவரையில் ஹாக்ஸ்டன் கல்லூரிப் படிப்பில் திளைத்து அதில் தேர்ச்சியுற்று வெளிப் போந்தபின் போப்பின் மனம் தமது தந்தையின் தொழிலை நாடவில்லை. விவலிய நூற்கழகத்தைச் சார்ந்து கிறிஸ்து சமயப்பணி செய்யவேண்டு மெனத் தேர்ந்து, தாம் பிறந்து வளர்ந்த நாட்டைவிட்டு 1839-ம் ஆண்டு தமிழ் நாட்டிற்கு வந்தார்.

போப் ஐயர் தமிழ் நாட்டில் பணிசெய்ய வந்து வசித்த இடம் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள சாயர்

புரம் என்ற பதியாகும். சாயர் என்ற போர்த்துக்கீசிய வணிகரால் நிறுவப்பெற்ற காரணத்தால் இவ்வூர் இப் பெயர் பெற்றதென்பர். இங்கு போப் ஐயர் தம் மதச் சேவையோடு கல்விச் சாலைகள் ஏற்படுத்திக் கலைப்பணி யையும் கருத்துடனும் ஆர்வத்துடனும் புரிந்து வந்தார்.

தமிழ் மக்கள் நடுவில் சேவை செய்வதற்கு அவர் தம் மொழி அறிவு தேவை என்பதை போப் ஐயர் உணர்ந்திருந்தார். அக்காலத்தில் வெளி நாட்டிலிருந்து இங்கு வந்த வேத போதகர்களில் போதக முறையில் இருதிறக் கொள்கை உடையவராயிருந்தனர். சென் னைக் கிறிஸ்துவக் கல்லூரியை நிறுவிய ஆண்டர்சனை யுள்ளிட்ட சில அறிஞர்கள் சமய அறிவை ஆங்கில மொழி வாயிலாகவே பரப்பக்கூடும் என்ற கருத்துடைய வர்கள். போப்பையரும் பிறரும் அவ்வந்நாட்டு மொழி வாயிலாகவே சமய அறிவைத் தருதல் தகவுடையது என்ற கொள்கையில் அழுத்தமான நம்பிக்கையுடைய வர்கள்.

இதனால் ஐயர் ஆங்கிலக் கல்வி நலன்களை அங்கீ கரிக்க மறுத்தார் என்பதற்கில்லை. மேல் நாட்டுக் கல்வி யைப் பெறத்தகும் நிலையில் இருந்த மக்கட்கெல்லாம் ஆங்கிலக் கல்வியைத் தாராளமாய் வழங்கினர். என்று லும் அவரது குன்றாத ஊக்கத்துடன் கூடிய உழைப்பு தமிழையறிந்த தமிழர்களையேபற்றி நின்றதாகலின் அத் தகைய தமிழ் மக்களின் உயர்வுக்குத் தமிழ் மொழிக் கல்வி இன்றியமையாததெனத் துணிந்து முதன்மை யாகத் தாம் தமிழ்க் கல்வி பயிலத் தொடங்கினர். இவ ருக்குத் தமிழறிவுறுத்திய பெருமகனர் ஆரியங்காவுப் பிள்ளை என்ற புலவர். இந்நல்லாசிரியரிடத்தும்

மகா வித்வான் இராமானுஜக் கவிராயரிடத்தும் இலக்கண இலக்கிய சமய நூற்களை முறையாகப் பாடங் கேட்டனர். நன்னூல் புறப்பொருள் வெண்பாமாலை போன்ற இலக்கண நூற்களிலும், புறநானூறு, குறள் போன்ற சங்க நூற்களிலும், சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி போன்ற பெருங்காப்பியங்களிலும் திருவாசகம், திருக்கோவையார் போன்ற பக்திப் பாடல்களிலும் ஐயரவர்களுக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. குறிப்பாக ஏலாதி, திரிகடுகம், மூதுரை, வாக்குண்டாம், நான்மணிக்கடிகை, நன்னெறி, நல்வழி, நீதிநெறி விளக்கம் போன்ற நீதி நூல்களிடத்துப் பெருமதிப்புக் கொண்டு அவற்றைப் பலகாலும் பயின்று வந்தார். பயிலும்படி பிறரைத் தூண்டினர்.

பெரும்புலவர் வாயிலாகத் தாம் கொண்ட சமய அறிவை சாயர் புரத்தில் வதிந்த காலத்து நன்கு வளர்த்துக் கொண்டார் நம் போப்பையர். அங்குள்ள இளைஞர்க்குக் கற்றுக் கொடுப்பதிலேயே இவர் தம் தமிழ்க் கல்வி வளர்ந்தது. “கற்பதற்குச் சிறந்த வழி படிப்பது; அதைவிடச் சிறந்த வழி கேட்பது; ஆகச் சிறந்த வழி படித்துக் கொடுப்பது” என்பது ஆன்றோர் வாக்கு. போப்பையரும் தம் தமிழறிவை வளர்த்தற்கு இங்குப் பேசப்பெற்ற ஆகச் சிறந்த உயர்வழியையே பற்றினர். அவர் கற்றுக்கொடுக்கக் கொடுக்க அவர் தம் தமிழறிவு தொட்டனைத் தூறும் மணற்கேணிபோல் சுரப்பதாயிற்று. சமயப் பணியில் மக்களோடு நெருங்கிப் பழகிய காரணமாக நூல் வழக்கோடு பேச்சு வழக்கையும் நன்கறிந்தனர். இது அவர் தமிழ் நூற்களைத் துருவிப் பயில்வதற்கும் அந்நூற்களின் உண்மைப்

பொருளை உணர்ச்சி குன்றாத வகையில் மொழி பெயர்ப்பதற்கும் பெருந்துணை செய்தது.

1849-ம் ஆண்டு ஐயர் இங்கிலாந்திற்குத் தற்காலிகமாகச் சென்ற காலத்து முதல் முதல் ஆக்ஸ்போர்டுடன் தொடர்பு கொண்டார் ஓய்வுக்கென அவர் அங்கு உறைந்த ஓராண்டும் தமிழ்த் தொண்டினை அவர் மறக்கவில்லை. ராயல் ஏசியாட்டிக் குவார்ட்டெர்லி, இந்தியன் ஆன்டிக்குவரி, இந்தியன் மாகசின் போன்ற பிரபல சஞ்சிகைகட்குத் தமிழ்மொழி பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதிவந்தனர். "தமிழ்நாட்டுப் புலவர்கள்" "புறநானூறு, "புறப்பொருள் வெண்பா மாலைப் பகுதிகள்" "தமிழ்ப் புனிதர் வரலாறு" ஆகிய இவைகள் இக்கட்டுரைகளில் குறிப்பிடத் தகுந்தன.

1851 ம் ஆண்டு போப்பையர் தமிழ் நாட்டிற்குத் திரும்பினர். சாயர் புரத்திலிருந்து மாற்றப்பெற்றுத் தஞ்சாவூருக்கு வந்தனர். சாயர்புரம் அவருடைய உழைப்பால் வேதவிளக்க சங்கத்தாரின் கல்வி ஸ்தாபனங்களின் கேந்திர ஸ்தானமாக விளங்கிற்று. தஞ்சையிலும் ஐயரது கல்விப் பணி தழைத்தது. அங்கு புனித பீட்டர் கல்லூரியை ஏற்படுத்தினர். அக்கல்லூரி 1906 ம் ஆண்டு வரை பி. ஏ. பட்டத்திற்கு ஏற்றவரையில் கல்வி அளித்தது. தற்போது உயர்நிலைப் பள்ளியாகத் தொடர்ந்து சேவை செய்கின்றது.

போப்பையர் கல்விப் பணியால் சாயர்புரமும் தஞ்சையும் பெற்ற பேற்றினை உதகமண்டலமும் பங்களூரும் அடுத்தடுத்துப் பெற்றன. ஐயர் இவ்விரு ஊர்களிலுமிருந்த கல்விச்சாலைகளில் தலைமை ஆசிரியராக விருந்து அருந்தொண்டு ஆற்றி வந்தனர்.

1880-ம் ஆண்டு போப் ஐயர் இங்கிலாந்திற்குத் திருப்புகின்ற காலத்து 40-ஆண்டுகள் தமிழ் மொழிக்கும் தமிழ் மக்கட்கும் செய்த நிறைந்த சேவையோடு திரும்பினர். தமிழ் நாட்டை விட்டும் ஐயர் தம் தமிழ்ச் சேவை அவரை விடவில்லை இங்கிலாந்தில் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகம் ஐயருடைய நுண்மாண் நுழை புலத்தை மெச்சியும் கல்விச் சேவையைப் பாராட்டியும் எம். ஏ. பட்டம் அளித்தது. அங்கே அவர் இந்தியன் சிவில் ஸெர்விஸ் என்ற இலாகாவில் தென் இந்தியாவில் அரசியல் உத்யோகங்களுக்கு வரும் ஆங்கிலேயர்களுக்குத் தமிழும் தெலுங்கும் கற்றுக் கொடுத்தார். இதன்றித் தமிழில் பாடப் புத்தகங்கள் எழுதினர்.

போப்ஐயர் தொகுத்த "தமிழ்ச் செய்யுட்கலம்பகம்" உயர்ந்த காப்பியங்கள் நீதிநூற்கள் ஆகியவற்றிலிருந்து திரட்டப்பெற்ற 612 செய்யுட்களைக் கொண்டது. நட்பு, சினமின்மை, பொறுமை என்ற இத்தகு தலைப்புகளிலே அறநெறிக் கருத்துகளை அடங்கிய இனிய செய்யுட்களைத் தன்னகத்தேயுடையது. ஒவ்வொரு செய்யுட்கும் ஆங்கில சூசகம் உண்டு. சந்தி பிரித்து விளக்கங்கள் கூறியிருக்கின்றனர்

போப்பையர் செய்தருளிய நாலடியார் ஆங்கில மொழி பெயர்ப்பு ஆக்ஸ்போர்டு சர்வகலா சாலையிலிருந்து செய்த நிலைபேறுற்ற பெரும்பணியாகும். அதன் முன்னுரையில் ஐயர் தொன்மைவாய்ந்த தமிழ்ப் பெருநூற்களோடு பரிச்சியம் பெறுதல் மட்டும் அவர் கருத்தன்று தமிழர்களுட் சிலர் ஆங்கிலத்திலே விளங்காநிற்றற்கான பெருமுயற்சியும் பேரூக்கமும் கொண்டவர்களாக இருப்பவும் தமது வியத்தகு மொழியில்

அலட்சியம் கொண்டவராயிருப்பது குறித்து வருந்தி அவர் தமக்கும் இத்தகைய மொழி பெயர்ப்பு நூற்கள் உதவுவன என்ற நம்பிக்கையைப் புலப்படுத்துகின்றார்.

தமிழில் வழங்குகின்ற தொன்மைவாய்ந்த இலக்கணங்களும் அதிலுள்ள வனப்பமைந்த யாப்பு அமைப்பும் நம் மொழியின் பன்னெடுங்காலம் பண்பாட்டினைக் குறிப்பன என்பது போப்பையர் கருத்து நூலின் நடைக்கும், நூல் நுவல் பொருளுக்கும் ஏற்றபடியெல்லாம் இயைகின்றதான உள்ளது சிறத்தல் என்ற சாத்திர முறையில் செல்லும், வளர்ச்சியைக் குறித்து மகிழ்ச்சி தெரிவித்து, இடைச்செருகலாக ஏற்பட்ட போலி நூற்களை பெரும் புலவர்களுடைய பெயரோடு பொருத்தப் பெறுவதை வன்மையுடன் கண்டிக்கிறார்.

தமிழ் எண்ணங்களை ஆங்கில மாணவர்களுக்கு அறிமுகப்படுத்தி வைப்பதே தமது மொழிபெயர்ப்பின் நோக்கம் என்று முன்னுரையின் முடிவுரையாகக் கூறுமிடத்து தமிழ் மொழி அறிவின் நோக்கத்தை அழகுறத் தெரிவிக்கின்றார் அவர் சொல்கிறார்: "இனிய தமிழினை அறிந்து அன்பு செலுத்துவோர் அதனைப் பேணுவோரை அறியவும் அவரிடத்து அன்பு செலுத்தவும் கூடும். அதனால் அந்நூலால் அறியப் பெறுதலும் அன்பு செலுத்தப் பெறுதலும் கைகூடும்.

சிவஞான போதம் போன்ற சாத்திர நூற்களையும் கூர்ந்து படித்துத் தெரிந்து அதன் காரணமாய் சிவஞான போதத்தையும் திருவாசகத்தையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தனர் சைவ சித்தாந்தத்தைப்பற்றித் தாம் கொண்டிருந்த கருத்தை வெளியிடுங்கால் "சைவ சித்தாந்தத் தத்துவம் திராவிட அறிவின் தேர்ந்

தெடுக்கப் பெற்ற பக்குவப் பொருள்'' என்று பாராட்டிப் பேசுவர்.

தமிழ் இலக்கணத்திற்குப் போப்பையர் செய்த சேவை மகத்தானதாகும். நூற்பாக்களில், சூத்திரங்களில் அமைந்த இலக்கண நூற்கள் மாணவர் பயிற்சிக்கு எளிதாக அமையாதன. முதல் முதல் உரை நடையில் பள்ளிப் பாலரும் படித்தறியும் பான்மையில் இலக்கணம் எழுதிய பெருமை போப்பையர் அவர்களையே சாரும். அவரது இலக்கணத்தின் மூன்று பகுதிகளும் இன்னும் புதியதாயத் தமிழ் கற்கும் பிறமொழியாளர்க்குக் கருந்தனமாக விளங்குகின்றன.

தனிப்பாசுரத் தொகை என்பது பரிதிமாற் கலைஞன் என்ற பெயருடன் விளங்கிய சென்னைக்கிறிஸ்தவக் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பண்டிதர் சூரிய நாராயண சாஸ்திரியார் என்பவரால் இயற்றப்பெற்ற 44 செய்யுட்களைக் கொண்டதொரு நவமான கவிதை நூல். இச் செய்யுட்கள் அனைத்திற்கும் போப் ஐயர் மொழி பெயர்ப்பு அருளியதோடு அவர் தந்த ஆங்கில முன்னுரையில் தமிழ் வளர்ச்சிக்குரிய வாய்ப்பான வழிகளைக் காட்டி யிருக்கிறார்.

தமிழிற் புதுமை வேண்டாத தொன்மை விரும்பிகளுடைய வெறும் பெருமைக் கூற்று பொருந்துதல் ஆகாதென்றும், உலக சரித்திரத்தை உற்று நோக்குகின்ற அளவிலும்—தமிழ் சரஸ்வதி கட்டுண்டு கிடப்பினும்—அவளுக்கு இற்றை நாட்குரிய நவீன சிறந்த அணிகலன்களை அணிதல் தகும் என்றும் அதிற் குறிக்கின்றார். ஆக்ஸபோர்டு பல்கலைக்கழகம் புதிய ஆராய்ச்சியோடு கூடிய நன்னூல், குறள், நாலடியார், திருவாசக வெளி

யீடுகளால் தமிழுக்குத் தன்னுலியன்ற சேவை செய்துள்ள தென்பதையும் உலக இலக்கிய வட்டாரத்தில் மேற்குறித்த நூற்களைப் புகவிடும் நவமான பணியை நல்ல முறையில் செய்துள்ள தென்பதையும் குறிப்பிடுகின்றூர் தமிழ் சிலரிடம் அகப்பட்டு அவர்களால் மட்டும் பூசிக்கப் படுதல் போதாது. நாட்டின் ஆண்கள், பெண்கள், சிறுவர், சிறுமியர் ஆகிய ஒவ்வொருவரின் இதயத்தில் எண்ணத்தில் நுழைந்துளதா? நுழையக்கூடுமா? இதுதான் போப்பையருடைய பொருத்தமான கேள்வி. தமிழ், பொதுமக்களிடம் பேசப்படல் வேண்டுமென்பது அவருடைய தமிழ் கனிந்த உள்ளத்தினின்றெழும் வேணவா. அதற்கு அவர் வகுக்கும் வழி, எல்லாராலும் எளிதில் புரிந்துகொள்ளக்கூடிய நடையைப் பின்பற்றி நூற்கள் எழுதப் பெறவேண்டுமென்பது.

ஆங்கில உலகிற்குத் தமிழ்ப் பெரும் இலக்கியங்களை அறிமுகப் படுத்தும் வரிசையில் திருக்குறளை மொழி பெயர்த்ததிறன் பாராட்டுக் குரியதொன்று. சுவாமி வீரமாமுனிவர் அறத்துப்பாலையும் பொருட்பாலையுமே இலத்தீனில் மொழி பெயர்த்துள்ளார். முனிவர் காமத்துப்பாலை மொழிபெயர்க்கவில்லை. போப் ஐயர் 1330 அருங்குறளையும் மொழிபெயர்த்திருக்கிறூர். உரிய இடங்களில் தனக்கு முன்னர் முறையே இலத்தீனிலும் ஆங்கிலத்திலும் திருக்குறளை மொழி பெயர்த்துள்ள வீரமா முனிவர், எல்லிஸ் துரையவர்கள் ஆகிய இன்னூரது மொழி பெயர்ப்புகளை மேற்கோளாகக் காட்டுகிறூர். பல இடங்களில் தம்மிருவருடைய மொழி பெயர்ப்புகளைக் காட்டிலும் வீரமா முனிவரது

மொழிபெயர்ப்பு சிறந்து விளங்குவதை உதார சிந்தையோடு எடுத்துரைக்கின்றனர்.

திருக்குறளைப் பற்றியும் தமிழ் மக்களைப் பற்றியும் ஐயர் கூறும் பாராட்டுரையை நாம் ஆழ்ந்து படித்தல் வேண்டும். அவர் கூறுகின்றார்: தாழ்மை, அன்பு, மன்னிப்பு இம்மூன்றும் திருக்குறளில் ஆசிரியரால் வலியுறுத்தி உரைக்கப்படுகின்றன. சிறந்த நீதியைக்கொண்டுள்ள மக்கள் வாழும் நாட்டில்தான் திருக்குறள் போன்ற ஒழுக்க நூல்கள் எழுதப்பெறும். தமிழ் பேசும் மக்கள் ஒழுக்கம் உடையவர்கள் என்பதே என் கூற்று. தமிழ் மக்களுக்கு நன்மை செய்ய வேண்டுவோர் இவ்வுண்மையை ஒப்புக்கொள்ள வேண்டும்.

40-ஆண்டுகள் தமிழ் நாட்டில் வளர்ந்து தமிழ்ச் சேவை செய்த போப்பையர் நம் நாட்டை விட்டு இங்கிலாந்து சென்ற காலத்தும் இடையறாது செய்து வந்தது அப் பணியே. அவர் இறப்பதற்குமுன் ஒரு அன்பர் "தங்கள் கடைசி விருப்பம் எது?' என்று கேட்டாராம். அதற்கு ஐயர் "என் கல்லறையின்மீது ஒரு தமிழ் மாணவன் என்று எழுதுங்கள்" என்றாராம். ஐயரவர்கள் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட தமிழ் ஆர்வத்தைச் சொற்களால் அளவிட்டுச் சொல்வது இயலுவதன்று.

# கூளப்ப நாயக்கன் காதல்

கூளப்ப நாயக்கன் காதல் என்ற இன்பச்சுவை மல்கிய இந்நூல் இன்றைக்கு ஏறத்தாழ இருநூறு ஆண்டு களுக்கு முன்பு இயற்றப் பெற்ற அகப்பொருள் நூல். இதனை இயற்றியவர் சுப்பிரதீபக் கவிராயர் என்னும் புலவராவர். இவர் மதுரை ஜில்லாவிலுள்ள நிலக் கோட்டை என்னும் பதியை ஆண்டு வந்த கூளப்ப நாயக்கன் என்னும் பாளையக்காரனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு சுமார் 400-கண்ணிகளில் இக் காதல் பிரபந்தத்தைச் சொற்சுவை பொருட்சுவை ததும்பப் பாடியிருக்கிறார்.

சிலப்பதிகாரம் போன்ற பெருங் காப்பியம் தொடங்கி அல்லியரசாணிமாலை போன்ற சிறு நூல் ஈறாக உள்ள பல சிறந்ததான நூற்களுக்கும் இலக்கண அமைதி இருப்பதை நாம் அறிவோம். பாட்டியல் என்று வழங்கப்பெறும் இலக்கண நூல், பிரபந்த இலக் கணங் கூறுவதாகும். தமிழிலே ஏனைய நூற்களுக்கு அமைந்துள்ளது போன்று இக்காதல் நூலுக்கு இலக் கணம் வகுக்கப் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை. பாட்டியல் எதுவும் இதைப் பற்றி உரைப்பதில்லை யாகவே "காதல்" என்ற இதன் பெயரிலிருந்து இதன் இயல்பை ஒருவாறு தெரிந்து கொள்ளக்கூடும்

காதல் பிரபந்தம் என்னும் இந்நூல் வகை இன்ன காலத்தில் தோன்றிற்று என்று அறுதியிட்டு உறுதி கூறுவதற்கில்லை. 17-ம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும் 18-ம் நூற்றுண்டின் முற்பகுதியிலும் இப்பிரபந்தம் இயற்றுவதில் நம் புலவர் பெருமக்கள் பெரும் கவனம்

செலுத்தி வந்திருக்கிறார்கள் என்று இலக்கிய வரலாற்றி லிருந்து அறிந்து கொள்ளலாம். இக்காலத்தில் தான் தெய்வங்கள் மீதும் மன்னர்கள், சிற்றரசர்கள், பிரபுக் கள் மீதும் பாடப்பெற்ற காதல் நூல்களைப் பற்றிக் கேள்விப்படுகிறோம் தெய்வங்கள் மீது பாடப்பெற்ற திருமலைக் கருப்பன் காதல், பழநிக் காதல், என்பனவும், பெரியவர்கள் மீது பாடப்பெற்ற சர்க்கரை மன்றாடி யார் காதல், முத்து இருளப்பப் பிள்ளைக் காதல், முத்துசாமிப் பிள்ளைக் காதல் என்பனவும் குறிப்பிடத் தகுந்த காதல் பிரபந்தங்களாம்.

இந்நூல்களுள் காலத்தால் மிகப் பழமையானது கூளப்ப நாயக்கன் காதலே. இலக்கிய நயத்தில் பாமர மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளத்தக்கது இந்நூலே யென்க. புலவர்கள் இந்நூலின் உயர்வைப் போற்றிப் பிரபந்தங்கள் எழுதினார்கள் என்றால் இதன் சிறப்பை என்னென்றுரைப்பது?

மதுரை வட்டாரத்தில் இன்றளவும் பாளையப் பட்டுக்கள் என்ற நிலப்பகுதிகள் இருக்கின்றன. இவை கள் வரலாற்றுத் தொன்மை வாய்ந்தன. விஜய நகர அரசனது தளகர்த்தனாயிருந்த விசுவநாத நாயக்கன் கி. பி. 1559ல் மதுரையைக் கைப்பற்றி அதனை யாண்டு வந்தான். இவன் போரிலே தனக்கு உறுதுணை செய்த படைத்தலைவர்களுக்குத் தான் வென்ற பிரதேசத்தின் சில பகுதிகளைப் பிரித்துக் கொடுத்து அவற்றை ஆளும் படி ஆங்காங்கே அவர்களை நியமனஞ்செய்தான். இவ்வாறு விசுவநாதன் ஆணையால் ஏற்படுத்தப் பெற்ற சிற்றரசுகளே பாளையப்பட்டுக்களாம். அதி காரிகள் பாளையக்காரர்கள் என்ற பெயர் பெறுவா

ராயினர். எனவே பாளையக்காரர் என்பவர் பாண்டிய ருக்குப் பின் மதுரையில் செங்கோலோச்சிய விசுவநாத நாயக்கனின் படைத் தலைவர்கள்.

புரவலராம் பாளையக்காரர்களிலே தலை சிறந்தவன் கூளப்ப நாயக்கன். இவன் இந்நூலினுள்ளேயே நாகம் கூளப்பன் எனவும், பெரிய நாகேந்திரன் எனவும், பெரிய நாகன் எனவும் அழைக்கப் பெறுகின் ருன். இவன் திருமலை நாயக்க மன்னனுக்கு மைத்து னன். இவன் மதுரை ஜில்லாவிலுள்ள நிலக்கோட்டை என்னும் பதிக்குத் தலைவன் என்பதை 'கற்கோட்டை என்றவர் மேல் கண் சிவந்து கண்டவர் செம்பொற் கோட்டை என்னப் புகழும் நிலக் கோட்டையினுன்' என்று புலவர் கூறுவதிலிருந்து ஐயமறத் தெரிந்து கொள்ளலாம்.

சுப்பிரதீபக் கவிராயர் மதுரை ஜில்லாவிலுள்ள திருமங்கலந் தாலுக்காவைச் சேர்ந்தவர். "கோமுனி வர் கொண்டாடும் கூடற்பரஞ்சோதி மாமுனிவர் செம் பொன் மலர்ப்பாதம் நான் மறவேன்" என்று குரு வணக்கங் கூறுகின்ருர். ஆதலின் இவர் திருவிளையாடல் புராணமியற்றிய பரஞ்சோதி முனிவரின் நன்மாணுக்கர் என்பது தேற்றமாகிறது. இவர் கவி பாடும் நல்வித் தையில் தேர்ந்தவர் என்பதை இவரது பரம விரோதி யாகிய பலபட்டடைச் சொக்கநாத பிள்ளையே ஒப்புக் கொண்டிருக்கிருர்.

அரசன் ஒருவன் தன் பரிவாரங்களுடன் வேட்டை மேற் செல்கிருன். வேட்டையில் தன் வீரப் பிரதாபங் களைக் காட்டி அரசனின் நன் மதிப்பைப் பெற

வீரர்கள் விரைகின்றார்கள். சகுனங் கூறுபவன் வழியில் வந்து அரசனுக்கு முழுவேட்டை கிடைப்பதோடு கன்னி மணமுங் கைகூடும் என்று உறுதி கூறுகிறான். காட்டைக் கலைத்து வேட்டை நிகழ்கின்றது. பல விலங்குகள் அகப்படுகின்றன. ஒரு மான் மட்டுந் தப்பியோடுகின்றது. அதனைத் தொடர்ந் தோடுகின்றான். அரசன் சோலையை அடைகிறான். அங்கே கண்ணுக்குள் கண்மணிபோல் கண்மணிக்குள் பாவையைப்போல் பெண்ணுக்குட் பெண் கொள்ள வந்த பெண்ணரசியைக் காண்கின்றான். அவள் தேவ மாதோ? மடமயிலோ? அன்றி எமன் விடுத்த தூதோ? என்று ஐயுறுகின்றான். அவள் கண் இமைத்தலாலும் கால் நிலந் தோய்தலாலும் மக்கட் பெண்ணே தான் என்று தெளிகின்றான். அவளது பேரழகில் ஈடுபட்ட வனாய் அவள் மீது காதல் கொள்கிறான். அவள் அருகே சென்று "ஊரே திருக்கும்? உலகேது? உமது திருப்பேரேது?" என்று மெதுவாய் உசாவுகிறான். பதிலைக் காணும் 'வார்த்தை யொன்று பேசினால் ஆகாதோ? என்று கெஞ்சுகின்றான். அப்பொழுதும் பாவை நல்லாள் பதிலுரைக்கின்றாளில்லை. அவள் அழகை வியந்து பாராட்டி காந்தருவ மணத்திற்கிசை யும்படி அவளை வேண்டுகிறான். கொடுப்பாரும் அடுப் பாருமின்றித் தலைவனும் தலைவியும் ஒரு பொழிலகத்து எதிர்பட்டுத் தாமே கலக்கும் காந்தருவ மணம் மங்கள மாய் நிறைவேறுகின்றது. இதற்குள் தலைவனைப் பிரிந்த வீரர்கள் அவனைத் தேடி வருகின்றனர். தலை வனை அழைத்துக்கொண்டு நகர் வந்து சேர்கின்றனர். இந்நிலையில் தலைவி தலைவனைத் தேடி அரற்றுகிறாள். ஆளைக்காணும். கவலை மேலீட்டால் மூர்ச்சையுற்று

விழுந்து கிடக்கின்முள். தலைவியைப் பிரிந்து சென்ற பாங்கியர் வருகின்முர்கள். அவளுடைய பரிதாபகர மான நிலையைக் கண்ணுறுகின்றனர். தூக்கமோ? வெம் பசியோ? தோழியரைக் காணுத ஏக்கமோ? மன்மதன் கண்வேணறுபட்ட காரணமோ? இக்குறைக்குக் காரணம் யாதோ என்று கலங்குகின்முர்கள். பின்னர் தலைவனைக் கூடிப் பிரிந்ததே இதற்குக் காரண மென்று குறிகளாற் கண்டு கொள்கின்றனர். தாய் கேட்டு உவகை யடைகின்முள் "மையப் பழம் நழுவிப் பாலில் விழுந்தது நான் செய்த தவமோ? மகள் முன் செய்த பூசாபலமோ?" என்று இறும்பூதெய்தி மகளை இருகையால் இறுகத்தழுவி "ஒன்றுக்கும் அஞ்சாதே, போகம் உன் பங்காச்சு" என்று உறுதி கூறுகின்முள். சிவிகையிலே தலைவியை ஏற்றித் தலைவனிடம் அனுப்பிவிட்டு மகிழ்வுற்றிருக்கிமுள் தாய். "பெஞ்சை நகர்வாழி பெரிய நாகேந்த்ர துரை கஞ்சமலர் மாது கருணை பெற்று வாழியவே" என்ற வாழ்த்தொலியோடு நிகழ்ச்சி முடிவுறுகிறது.

இந்நூலிலே காணப்பெறும் இயற்கை வர்ணனை கள், தலைவன் தலைவியது இயல்புகள், உளநூலாரும் வியக்கத்தக்க முறையிலே அமைந்தனவும் காதலர்கள் மனதைத் தத்ரூபமாய் வெளிக்காட்டுவனவுமான உயிர் ஓவியங்கள், உவமை நயங்கள் அக்காலத்திய மரபுகள், ஆகிய நயமான பகுதிகள் படித்துப் படித்து இன்புறத் தக்கன.

இப்பாட்டுடைத் தலைவனுக்குரிய தசாங்கங்களிலே தலையாய அங்கமெனத் தகும் மலையைப் பற்றிய வர்ண னையில்|மெய்ப்புலமை|நயம் விளங்கித் தோன்றுகின்றது.

மிகமிக உயர்ந்த மலை என்று கூற விரும்புகின்றார் புலவர். வானளாவி நிற்பதற்குத் தக்கதொரு காரணத்தையும் கற்பிக்கின்றார். அம்மலை தன்னைச் சார்ந்து வாழ்பவர்களுக்குத் தாராளமாய்த் தேனைத்தருகின்றது. இத்தோடுமட்டுந் திருப்தியடைந்து விடவில்லை. நல்லுபகாரிகள் அடுத்தடுத்து உதவுதலில் ஆசைகொள்வது போன்று இம்மலையும் மக்கட்குத் தேனளித்தலோடு தேவர் அமுதம் அளிக்க வேண்டும் என்று ஆசைப்படுகின்றது. இந்த ஆசை மேலீட்டால்தான் வான்முகட்டைத் தாக்குகின்ற அளவில் உயர்ந்தோங்கி வளர்கின்றதாம் இம்மலை. இக்கருத்தை

"தேனளித்த கானவர்க்குத் தேவரமு தாக்க
வானளந்து நிற்கும் வராக கிரிவேந்தன்"

என்று அழகு படக் கூறுகின்றார். வராக கிரி என்பது பன்றி மலையாகும் வித்தியாதரன் ஒருவனை முனிவரொருவர் சபித்தாராக அவன் உழன்று திரியவும் பாண்டியனாலே வேட்டையாடிக் கொல்லப் பெற்றான். அவன் உயிர் விண்ணுலகு சென்றது. உடல் மலையாயிற்று. இதுதான் வராககிரி என்ற பெயரோடு இப்பாட்டுடைத் தலைவருக்குரிய மலையாயிற்றென்க.

தலைவனுடைய வாய்மைத்தன்மையை வியந்து பாராட்டுகின்றனர். வேத நூற்களிலே கூறப்பட்டன கூட ஒரு வேளை பொய்த்துப் போகலாம். வற்றாத நீரைக் கொண்ட கடல்கூட சிலவேளை வற்றிவிடலாம். சூரியனும் சந்திரனும் தத்தம் நிலையினின்றும் பெயரலாம். இவைகள் பொய்த்தாலும் தான் சொன்ன மொழி பொய்க்காத நிலையிற் காக்கக் கூடிய வாய்மையாளன் என்பதை.

“மாமறை நூல் பொய்த்தாலும்
வாரிதி நீர் பொய்த்தாலும்
சோமரவி பொய்த்தாலும்
சொன்ன மொழி பொய்யாதான்”

என்று மிகச் சுருங்கிய சொற்களிலே பொருள் ஆழமுடைய கருத்தை அமைத்துப் பாடுகின்றார். இவ் வாறே தலைவனுடைய கொடை நலத்தைக் கூறுந் திறம் போற்றற்குரியது.

“அண்டர் தருவுக்கும் அருங்காம தேனுவுக்கும்
கொண்டல் தனக்கும் கொடை பயிற்றும் செங்கரத்தான்”

என்கிறார்.

தலைவருடைய கொடைத் திறத்தைப் பாராட்டப் புக்க புலவர் நினைத்ததைத் தரவல்ல ஆற்றலுள்ள கற்பக மரமும் காமதேனுவும் மேகமும் வரையாது பொழியும் தன்மையுடையது, என்றாலும் இவைகள் தாமும் இவனிடத்திருந்தே கொடைப் பயிற்சி பெறும் நிலையிலுள்ளன என்றால் இவனது கொடை நலம் எத்தகையது என்று எடுத்துரைக்க எவர் வல்லவர் என்று குறிக்கின்றார்.

தலைவனுடைய அரண்மனை வாயிற் சிறப்பை சில சொற்களால் நம் மனக்கண் முன்னே ஒரு படமாக எழுதிக் காண்பிக்கின்றபடி இதுவாம்.

“பொன்னிலங்க வச்ரப் பொடியிலங்கப் பொற்கதவு
முன்னிலங்கப் பின்னிலங்க முத்திலங்கும்வாசலினான்”

இவற்றுள்ளே உயர்வு நவிற்சிகளிருப்பினும் உண்மை விளக்கத்திற்கு, சொல்லுகின்றவற்றைத் தெளிவுபடச் சொல்லுவதற்கு, வாசகர் மனத்திலே

விஷயத்தைப் பசுமரத்தாணிபோல் பதிப்பதற்கு, இவை வேண்டியவைதானே.

பாக்களுக்குப் பொருள் காண்கின்ற முறையை நான்காகக் கூறுவர் வடநூலார். இம்முறைமை பாக்களில் பொருட்செறிவு, நுண்பொருளமைதி, வெண்மைத்தன்மை ஆகிய இவை நோக்கிப் பெயர் பெறும். இவை க்ஷீரபாகம், திராக்ஷாபாகம், இக்ஷுபாகம் நாரிகேளபாகம் எனப்படும் நாரிகேளபாகம் என்பது மட்டை முதலியவற்றை உரித்து ஓட்டை நீக்கி பருப்பைக் கடித்து மென்றாலன்றி இனிமையை அறிய இயலாதது போல வருந்தாது அறியமுடியாத செய்யுள் வகையாகும். இதற்கெடுத்துக் காட்டாக இந்நூலிலிருந்து ஒரு கண்ணியைக் காண்போம். தலைவனும் தலைவியும் உள்ளம் உவப்பக் கூடுகின்றார்கள் கூட்டத்திற்குப் பின் தலைவனைச் சேனாவீரர் அழைத்துச் செல்ல அவன் தன்னைப் பிரிந்தானாக தலைவி தேடி வருந்துகின்ற நிலை. இந்நிலையில்

"காலாயுதக் கொடியோன் கையாயுத விழியாள்
மாலாயுதமீன்ற மாமணியைக் காணாதிர்த்தாள்"

என்று புலவர் கூறுகின்றார். இதன் பொருளை இதைப் படித்த அளவிலே தெரிந்து கொள்வதற்கில்லை. நுணுகிப் பார்க்கிறபோது தான், வருந்திப் பொருள் காண முயலும்போதுதான் பொருளோடும் பொருளழகுங்கண்டு மகிழ்கின்றோம். காலாயுதம் என்பது காலை ஆயுதமாகக் கொண்டு சண்டையிடுகின்ற கோழியைக் குறித்தது. இக்கோழிக் கொடியினைத் தூக்கியவன் முருகன். எனவே காலாயுதக் கொடியோன் என்று சிறப்பித்தது முருகனை. அவன் கையாயுதவிழியாள்

என்கிறார். முருகனுடைய கையாயுதம் சுடர் விட்டி லங்கும் வெற்றி வேல். தலைவியினது விழியின் கூர் மைக்கு முருகனுடைய வேல் உவமையாக எடுத்தாளப் பட்டது. காலாயுதக்கொடியோன் கையாயுத விழியாள் என்று கூறுகின்றார். அடுத்த வரியில் மாலாயுதமீன்ற மாமணியைத் தானுதிர்த்தாள் என்கிறார். மால் திரு மால். திருமாலுக்குரிய ஆயுதங்களாகிய சங்கு சக்கரம், கதை வில், வாள் எனப்படுகின்றவற்றுள்ளே பிரதான மானது சங்கமாகும். ஆக மாலாயுதம் என்றது திருமா லுக்குரிய சங்கத்தை. அச்சங்கு ஈனும் மாமணி முத்து. அதனை ஒத்திருப்பது இவள் தன் கண்ணீராகவே மாலா யுதம் ஈன்ற மாமணியைத் தானுதிர்த்தாள் என்கிறார். தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவாற்றாதவளாய் முத்து முத்தாகக் கண்ணீர் வடிக்கிறாள் என்பதைக் கூறுகின்ற அக்கண்ணியை மீண்டுங் கேட்போம்.

"காலாயுதக் கொடியோன் கையாயுத விழியாள்
மாலாயுதமீன்ற மாமணியைத் தானுதிர்த்தாள்"

சொல்லடுக்கிலேயும் பாட்டின் சந்தத்திலேயும் புல வன் தான் கூறும் பொருள் தொனிக்கும்படி செய்வது அவனது கவிதா சாமர்த்தியங்களில் பாராட்டத்தக்க தொன்றாம். நம் புலவர் யானையினது கோபத்தையும் அது மாற்றலரைத் தூக்கி எறிந்து தன் சினந்தீர்க்கும் பான்மையையும் கூறுகின்ற முறையைக் கேட்போம்.

சண்டையிற் பொருங்கொடித்த
லந்தகர்த்து வஞ்சரைக்கைக்
கொண்டெடுத்தறைந் தூரப்பு
கும்ப உக்ர குஞ்சரத்தான்.

இப்பாட்டின் மிடுக்கான சந்தத்திலேயே யானையினுடைய கோபத்தைக் காண்கிறோம். கோப மிகுதியினால் தனது துதிக்கையைக் கொண்டு மாற்றலரைப் பற்றியிழுத்து நிலத்தில் அறைந்து ஆர்ப்பரிக்கின்றதையும் நாம் கேட்கின்றோம்.

கொடித்தலம் என்பது கொடியைத் தாங்கியுள்ள படைப்பகுதி. அதனைத்தகர்த்து அப்பகைவரான வஞ்சகரைத் தன் துதிக்கையால் எடுத்து நிலத்தில் மோதிப் பேரொலி செய்கின்ற கோபமிக்க யானையை இம்மிடுக்கான நடையும் சொல்வேகமும் நம் மனக் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகின்றன.

அன்று குணமாலை எனும் அன்பான பாங்கியைப் பார்த்து
இன்றெனது கண்ணின் இடக்கண் துடிக்கிதென்றாள்
கன்னியழியாத காரிகையே இன்றுனக்குச்
சொன்னேன் அதிக சுப சோபன முண்டாகு(ம்) என்றாள்

இதிலிருந்து மகளிர்க்கு இடக்கண் துடித்தல் நற்சகுனம் என்று கருதப்படுகிற சேதி அறிந்து கொள்ளற்பாலது.

இலக்கிய நயம் மலிந்து அறிவுக்கு நல் விருந்தாயும் மனத்திற்கு மகிழ்ச்சி தரும் சொல் ஓவியமாயும் செவிக்கின்பஞ் செய்யும் செவ்விய கானமாயும் அமைந்த இந்நூலிலே ஆன்றோர்களாலே ஒப்புக்கொள்ளத் தகாத சிற்சில சித்ரங்கள் உரைகள் பாடல்கள், கேசாதிபாத வர்ணனைகள் இடம் பெற்றுவிட்டன. இவை நீங்கலாக இந்நூல் இளைஞரும் படித்தின்புறத்தக்க வகையில் அமைந்துள்ளது.



## நையாண்டிப் புலவர்

உயர்தனிச் செம்மொழியாகிய நம் இனிய தமிழ் மொழியை முறையாகக் கற்று, தாம் கற்றுணர்ந்த விழுமிய கருத்துக்களையும் தம் அநுபவத்தில் அறிந்த சிறப்பமைந்த சிந்தனைகளையும் வியத்தகு செய்யுட்களில் வடித்துதவிய நல்லிசைப் புலவர் பலராவர். இப்புலவர் குழுவிலே நீல வானத்தையும் நெடிய மலைத் தொடரையும் துள்ளி ஓடும் காட்டாற்றையும் இன்னோரன்னகை புனைந்தியற்றுக் கவின்பெறு வனப்பு வாய்ந்த ஏனைய இயற்கைப் பொருட்களையும் பற்றி விதந்தோதும் புலவர் ஒரு திறத்தினர். பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப்பாடும் ஆற்றல் பெற்று ஆண்டவனது அருள் திறத்தை இசைப்போரும், அவனை வழிபடுதற்குரிய நல்வழிகளை வகுத்துக் காட்டுவோருமான சமய சன்மார்க்கப் புலவர் பிறிதொரு பிரிவினராவர். கர்ண பரம்பரையாய்க் கேட்ட கதைகளை விரிவான முறையில் பல்சுவை பொருந்தப் பாட்டிலே யாக்கும் காப்பியக் கவிஞர் இன்னொரு பாலார்; வளமார்ந்த வாக்குவன்மையும் சிறந்த ஞாபக சக்தியும் நிரம்பப்பெற்று நினைத்த மாத்திரத்தில் கவி சொல்லவல்ல நல்வித்தை கைவரப் பெற்றவராய்த் தாம் போற்றவேண்டும் என்று எண்ணும் புரவலர்களைப் போற்றியும் தூற்றவேண்டுபவரைத் தூற்றியும் பொருட்கள். நிகழ்ச்சிகளைப்பற்றியும் மக்களைப்பற்றியும் தமது கருத்துக்களை ஒழிவு மறைவின்றிப் பாக்களில் வெளியிடும் புலவர் மற்றொரு வகையினர். இவர்களே சீட்டுக் கவிஞர்கள் என்று அழைக்கப் பெறுவர் இவர்கள் அவ்வப்போது இயற்றிய பாடல்களுக்கு விடுபாடல்கள் அல்லது விடுகவிகள் என்

பதுபெயராய் அமையும் "மூர்சு விடுமுன்னே முந்நூறும் நானூறும் ஆச்சுதென்றால் ஐந்நூறும் ஆகாதோ?" என்று ஒரு புலவர் சொல்லவும் இன்னொருவர் "இம்மென்னும் முன்னே எழுநூறும் எண்ணூறும் அம்மென்றால் ஆயிரம் பாட்டாகாதா?" என்று கூறவும் ஏற்பட்டு இவ்வாறு ஒருவரோடொருவர் போட்டியிட்டுப் பாடும் புலமை மிக்கவரே இச்சீட்டுக் கவிஞர்களாம்.

இத்தகைய 'சீட்டுக் கவிஞர்களுள்ளே நையாண்டிப் புலவரும் ஒருவராவர். முன்னர்க் குறிப்பிட்ட இயற்கைப் புலவர்கள், பக்திப் பாவலர்கள், காப்பியக் கவிஞர்கள் ஆகிய இவர்களைப்பற்றிப் பெரும்பாலும் தக்க வரலாறுகள் உண்டு. வரலாறுகள் இல்லை என்றாலும் மெய்கலந்த புனைந்துரைக் கதைகள் என்கிலும் வழங்கி வருவதுண்டு. தனித்த வரலாறுகள் கதைகள் அகப்படாத நிலையில் அவர்களுடைய பாடல்களிலிருந்து அவர் தம் வரலாற்றை நிர்ணயிக்கத்தக்க அத்துணைவிரிந்த முறையில் அவர்கள் பாடல்கள் இயற்றியுள்ளார்களாகவே அவர்களுடைய சரித்திரத்தை ஒருவாறு அறிந்து கொள்ளுதல் கூடும்.

நையாண்டிப் புலவர் போன்ற சீட்டுக் கவிஞர்களைப்பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் மதிக்கத் தக்கனவாயில்லை. இவர்கள் இயற்றிய பாடல்கள் சிலவாதலின் அவைகளிலிருந்து இவைகளைப் பற்றித் தெரிந்து கொள்ளத் தக்க செய்தியும் சிலவேயாம்.

நையாண்டிப் புலவர் சரிதையைப்பற்றி இலக்கிய வரலாற்றில் யாதுங்காணப் படுமாறில்லை. பொய்யாமொழிப் புலவர், காளமேகப் புலவர், அந்தகக் கவி வீரராகவ முதலியார் ஆகிய இவர்களைப் பற்றிக் கூறப்

படும் கதைப் போக்கான வரலாற்றைப் போன்ற தொன்று தானுங் கிடைக்கக் கூடுமாயில்லை.

நையாண்டிப் புலவர் என்ற பெயர் காரணம்பற்றி வழங்கப் பெற்றதாகக் கொள்ளலாம். நையாண்டி என்ற சொல்லுக்கு நாடோடிப் பாட்டு வகை, கேலி, சிரிப்பு வார்த்தை, என்பனவற்றைப் பொருளாகக் கொள்ளலாம். நாடோடிப் பாட்டுவகையில் புகழ்பெற்ற காரணமாக இப்பெயர் இவருக்கானது என்று முடிவு கூறுவதற்கில்லை. ஏனென்றால் இவர் நாடோடிப் பாடல் எதுவும் இயற்றியுள்ளதாகத் தெரியவில்லை. கேலியாக, சிரிப்பிற்குரிய வார்த்தைகள் புனைந்து கவிபாட வல்ல ஆற்றல் கண்டு மக்கள் இவரை நையாண்டிப் புலவர் என்று அழைத்தனரோ என்றால், அதுவும் உறுதிப் படுமாறில்லை. இவர் பாடியதாகக் கிடைக்கப்பெறும் பாக்களில் கேலிப் பேச்சு ஹாஸ்ய உரை இடம்பெற வில்லை. ஹாஸ்ய ரசமலிந்த பாடல்கள் இவர் பாடியிருத்தல் கூடும். அது உண்மை என்று நிறுவப்பெறு மானால் நையாண்டிப் புலவர் என்ற பெயர் இவருக்குப் பொருத்தமாய் அமையும்.

இனி இவரது பாடல்களில் நமக்குக் கிடைத்துள்ளவை நான்கே. ஒன்று ஆரூர்ச் சிவபெருமானைப் பற்றியுள்ளது. இரண்டு பாடல்கள் இவர் காலத்துப் பரதவ வள்ளல் பள்ளிக்கொண்டான் என்பவனைப் பற்றியவை. இன்னுமொரு பாடல் ஆடைச் சிறப்பை அறிவிப்பது.

திருவாரூரில் திருக்கோவில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை வணங்கி அப்பெருமானது பக்தராய்ப் பணிவோர்க்கு சுவர்க்க மோட்ச சுகங்கள் எளிதில் கிடைக்கும் என்று கூறுகின்ற விடத்து இறை

வனைப்பற்றிச் சொல்லும் நிந்தாஸ்துதி அறிந்து மகிழத் தக்கது. அப்பாடல் வருமாறு.

"விற்கம்பத் தடியாலும் அடியுண்டான்
விண்ணவரை வேலை கொள்ளும்
நற்கம்பத்தடியாலும் தூக்க வசையான்
ஆரூர் நாதன் கோவில்
பொற்கம்பத் தடியினின்று வணங்கத் தானை
உன்னிப் போற்றி னோர்க்கு
சொர்க்கம் பத்தடியப்பால் மோட்சப்
தடியாகத் தோன்றுந் தானே.

இதன் பொருள், அர்ச்சுனன் கொண்டிருந்த வில்லாகிய தூண்போன்ற தண்டினால் அடிபட்டவனும், தேவர்களை ஏவலாளர்களாய்த் தொண்டு செய்யும்படியான பேறு பெற்ற அழகிய பத்துத் தலைகளையுடைய இராவணனால் தூக்க அசையாதிருந்தவனுமான திருவாரூர்ப் பெருமானது கோவிலிலே பொன்னாலியன்ற தூணடியில் நின்றுகொண்டு பற்றிடங்கொண்ட அப்பிரானை வணங்கினோர்க்கு சொர்க்கம் பத்தடி தொலைவிலும் அதற்கப்பால் மோட்சம் பத்தடி தொலைவிலும் காணப்படும் என்பதாம்.

விற்கம்பத்தாலும் அடியுண்டான் என்றதனால் அரிமர்த்தன பாண்டியன் காலத்தில் இறைவன் கூலியாளாகத் தோன்றிப் பிட்டுக்கு மண் சுமக்கச் சோம்பிய பொழுது பிரம்பாலும் அடிக்கப்பட்ட செய்தியைக் குறித்தார் இங்கே விற்கம்பத்தால் அடியுண்டது அர்ச்சுனன் பாசுபதாஸ்திரம் பெறவேண்டித் தவஞ் செய்த பொழுது சிவபெருமானும் உமா தேவியாரும் வேடுவன் வேட்டுவச்சி கோலந்தாங்கி தேவகணங்க

ளோடு வரவும் எதிர்ப்பட்ட பன்றியைக் கொன்று வீழ்த்தியவன் தானே என்று அர்ச்சுனன் உண்மையைச் சொல்ல அவனைச் சோதித்தறிய இறைவன் தானே அப்பன்றியைக் கொன்றவன் என்று கூறி மறுக்க இருவருக்குமிடையே நடந்த போரில் அர்ச்சுனன் தனது காண்டீபம் எனப்படும் வில்லால் சிவபெருமானை ஓங்கியடித்த வரலாறும்.

நல்கம்பத்து அடியான், அழகிய பத்துத் தலைகளையுடைய இராவணன் இவன் குபேரனுடைய புஷ்பவிமானத்தைக் கவர்ந்து அதிலேறிக்கொண்டு கயிலையைக் கடக்க எத்தனிக்கையில் கயிலையிலுறைந்த சிவபெருமானையும் பொருட் படுத்தாது இவரோடு இம்மலையைக் கல்லுவேன் என்று குறுநரை செய்து முயன்றுழுகை சிவபெருமான் தமது பெருவிரலால் சிறிது அழுத்த வருந்தித் தான் முயன்றது முடியாது துன்புற்றான் இச்செய்தியையே நல்கம்பத்து அடியானும் தூக்க அசையான் என்பதனால் குறிப்பிட்டார்.

'இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன் உமையமர்ந்து உயர்மலை இருந்தனனாக ஐயிரு தலையின் அரக்கர் கோமான் தொடிப் பொலி தடக்கையிற் கீழ் புகுந்து அம்மலை எடுக்கல் செல்லா துழப்பவன் போல, என்ற கலித்தொகைச் செய்யுளில் இச்செய்தி விளக்கமாகப் பேசப்படுதல் காண்க.

வன்மீகம் என்ற சொல்லுக்குப் புற்று என்பது பொருள். வன்மீகத்தான் புற்றிடங் கொண்ட பெருமான். எவர் இளைப்புறாமல் யாகத்தைச் செய்து முடிப்பரோ அவரே தலைவர் என்று தம்முள் உறுதி செய்து திருமாலும் இந்திரன் முதலிய கடவுளர்களும்

குருக்ஷேத்திரத்தில் யாகமொன்று செய்தனர். திருமால் ஒழிந்த கடவுளர் அயர்ந்து யாகத்தைக் கை நெகிழ்ந்தனர். திருமால் ஆயிரம் ஆண்டு யாகஞ்செய்து தாமே தலைவர் என்று தருக்கியிருந்தனர். சிவபெருமான் ஆணையால் ஐசுவரமென்னும் வில்லொன்று யாக நெருப்பிலிருந்து எழுந்தது. திருமால் அதனைக் கைப்பற்றி வளைத்து அம்பு தொடுத்துப் பிற கடவுளர்களைத் துரத்த அவர்கள் ஓடோடி வந்து திருவாரூர்த் தலத்தை யடைந்தார்கள். அவர்களைப் பின் தொடர்ந்த திருமால் த் தலத்தின் சிறப்பால் தன் வன்மையும் செருக்கும் குறையப்பெற்று பயக்கமுற்று தான் கொணர்ந்த வில்லையூன்றி அதன்மீது தலையைச் சாய்த்துத் துயில்வாராயினர். அப்பொழுது தேவர்கள், பிருகஸ்பதியின் குமாருடைய கட்டளைப்படி அவ்வில்லின்கீழ் ஒரு புற்றை உண்டாக்கித் தாம் கறையான் வடிவைக் கொண்டு அப் புற்று வழியாகச் சென்று வில்லினது நாணை அரிந்த பொழுது சிவபெருமான் அப்புற்றிலிருந்து சோதி வடிவாகத் தோன்றினரென்பது வரலாறு.

ஆன்மாக்கள் செய்யும் நல்வினைப்பேற்றால் சுவர்க்கத்தில் கிடைக்கும் பேறு துன்பக் கலப்பில்லாத இன்பப் பேறுதானென்றாலும் நிலைபேறுடைய பேறில்லை யாதலால் நிலைபேறுடையதாகிய வீட்டின்பப் பேறும் அதற்கடுத்தபடியாய் எளிதிற் கிடைக்கும் என்பது தோன்ற சொர்க்கம் பத்தடி அப்பால் மோட்சம் பத்தடியாகத் தோன்றுமென்று கூறினர்.

அடியார்க்கு எளியவன் போலக் காட்டிப் பின்னர் தன் முழு ஆற்றலையும் அறிவித்து அருள் செய்கின்ற ஆலமர் செல்வனும் இறைவனை தன்பாற் பிறந்தவர்க்கு

முத்திதருவதென்று போற்றப்பெறும் திருவாரூர்த் திருத்தலத்திலேயுள்ள சிவலிங்க வடிவத்தில் வணங்குவோர்க்கு சுவர்க்க மோட்ச இன்பங்கள் சுலபமாய்க் கிடைக்கப்பெறுவன என்பது இப்பாடலின் கருத்து.

நம் புலவரால் பாடுதற்குரிய புகழமைந்த பள்ளிகொண்டான் நெய்தல் நிலத்தவன். தனவைசிய மரபைச் சார்ந்த பரதவப் பெருமகன். புகழ் என்னும் பொற்பேறு நின்ற பெருமை யுடையவன். இவனது உயர்ந்தோங்கிய புகழைக் கடவுளர்கள் நன்கு காணும் கருத்துடனேயே தத்தமக்குரிய வாகனங்களில் ஏறிக் கொண்டிருப்பதாய்க் கூறுகின்றார் புலவர்.

“வள்ளி கொண்டான் மயிலேறிக் கொண்டான்
மதிபோலும் மலை
வெள்ளி கொண்டான் விடையேறிக் கொண்டான்
விண்ணவர்க் கமுதம்
துள்ளி கொண்டான் புள்ளிலேறிக் கொண்டான்
சுபசோபனம் சேர்
பள்ளி கொண்டான் புகழ் கவிக்கொண்டான்
என்று பார்க்க வென்றே”

வள்ளி கொண்டான் வள்ளியம்மையை மணம் புரிந்த முருகவேள், அவர்க்கு வாகனம் மயில். மதிபோலும் மலை வெள்ளி கொண்டான், சந்திரன் போன்ற வெள்ளி மலையாகிய கயிலாய மலையைத் தனக்கு உறைவிடமாகக் கொண்ட சிவபெருமான், அவர்க்கு வாகனம் இடபம். விண்ணவர்க்கமுதம் துள்ளி கொண்டான், தேவர்கள் பொருட்டு அமுதத்தைத் துளித்த திருமால். அவர்க்கு வாகனம் கருடன்.

முருகப்பெருமானும், சிவபெருமானும், திருமாலும் முறையே மயிலின்மீதும் இடபத்தின்மீதும் கருடன்

மீதும் ஏறிக்கொண்டது புகழேறிக்கொண்ட பள்ளி கொண்டான் கீர்த்தியைக் காணுதற்கே என்பதைக் கவி கூற்றாகக் கொள்ளுதல் வேண்டும். கடவுளர்கள் தாமும் முயன்றளக்கும் நிலையிலுள்ள இவன் புகழ் சாதாரண மக்களால் அளவிடற்கரிய தொன்றென்பதை இதன் கருத்தாகக் கொள்க.

பள்ளிகொண்டான் வரையாது வழங்கும் வள்ளல் என்பதும், நிறைந்த தமிழ்ப்பற்று உடையவன் என்பதும், தமிழ்ப் புலவர்க்குப் பரிசில் வழங்குகின்ற காலத்து அவன் எத்துணை விலையுயர்ந்த பொருளையும் பொருட் படுத்தான் என்பதும், அவனைப்பற்றி நம் புலவர் பாடிய தொரு செய்யுளிலிருந்து நாம் அறிய வருகின்ற செய்தி களாம். அவனது கொடைச் சிறப்பைக் குறிப்பிடும் போது,

"செங்கை வரிச்சிலை ஏற்பவளைதர் சம்புத்
தீது தங்கவில்
எங்கு வைத்தாலும் பள்ளி கொண்டான்
தமிழ்க்கீய வென்றே
திங்கள் இரவி தினஞ் சுற்றிக் காக்கத்
திரை சுருட்டும்
கங்கைக்கும் உத்தரத்தே ஒளித்தான்
உமை காதலனே"

உமாதேவியின் கணவனாகிய சிவபெருமான் தனது சிவந்த கையில் ஏற்றுதற்குரிய கட்டமைந்த வில்லானது தங்கத்தாலானது. அதை இந்நாவலந் தீவிலே எவ் விடத்தில் வைத்தாலும் பள்ளி கொண்டான் அதை எடுத்துத் தமிழ்ப் பாடல்களுக்குப் பரிசிலாக வழங்கி விடுவான் என்று அஞ்சியே சந்திர சூரியர்களால் நாள் தோறும் வலம் வந்து காக்கும்படியான அலைகள் மோது கின்ற கங்கையாற்றிற்கும் வடக்கே அதனை ஒளித்து வைத்து விட்டான்.

சிவபெருமான் திரிபுர சங்கார காலத்தில் மேரு மலையை வில்லாகக் கொண்டார் என்பது புராண வரலாறு. இப்பெருமானுக்கு வில்லாக அமைந்த அம்மலை மீது சூரியன் சார்ந்து நிற்கும் தோற்றம் தங்கத்தை உருக்கிவிட்ட தன்மையை ஒத்திருப்பவே, இத்தங்கத்தைப் பாதுகாப்பதற் கென்றே கங்கையாற்றிற்கப்பால் சிவபெருமான் ஒளித்து வைத்துவிட்டான், இல்லையேல் பள்ளி கொண்டான் துருவித் துருவிப் பார்த்துத் தங்கமிருப்பதைக் கண்டு அதனைத் தமிழ்ப் பாலவர்க்கு வழங்கி விடுவான் என்று கவிஞர் சாமர்த்தியமாகக் கூறுகின்றனர்.

உலகத்தில் ஆடைச் சிறப்பில்லாதவர்களுக்கு மதிப்பில்லை. ஆடை இல்லாதவன் அரை மனிதன் என்பது பழமொழி. உலகங் கண்ட இவ்வுண்மையைப் புலவர் கற்பனைக் காரணத்தோடு வலியுறுத்துகின்ற தன்மை அறிந்து இன்புறுதற்குரியது. புலவர் கூறுகிறார்.

“மேலாடையின்றிச் சபை புகுந்தால்
இந்த மேதினியோர்
நூலாயிரம் படித்தாலும் எண்ணார்
நாவல் பாற்கடலோ
மாலான வரணி பொன்னாடை கண்டு
மகளைத் தந்தே
ஆலால மீந்தது தோலாடை சுற்றும்
அரன் தனக்கே”

ஒருவன் எண்ணிறந்த நூல்களைப் படித்தாலும் அவன் சிறந்த தன் நிலைக்குரிய உயர்ந்த நல்லாடையில்லாமல் பெரியவர்கள் கூடியுள்ள சபையில் நுழைந்தால் உலக மக்கள் அவனை ஒரு பொருட்டாக மதித்து மதிக்க மாட்டார்கள். நல்ல உயர்ந்த ஆடை என்பதற்கு

இடம்பமான ஆடை என்பது பொருளல்ல. சமூகத்தவ ரால் சிறந்த ஆடை என்று கருதப்படுகின்ற சுத்த ஆடையே நல்ல உயர்ந்த ஆடையாம். இந்த ஆடை ஆசாரத்தை எல்லா நாகரிக சமூகமும் அவாவுகின்றது. இந்த ஆசாரத்தைப் புறக்கணிக்கின்றவர்களை சமூகம் புறக்கணிக்கின்றது. அவ்வுண்மையையே நம் புலவர் "மேலாடையின்றிச் சவை புகுந்தால் இந்த மேதினி யோர் நூலாயிரம் படித்தாலும் எண்ணார்" என்று வாச கத்தால் உணர வைக்கின்றார்.

திருப்பாற்கடலைக் கடைகின்ற காலத்து அதிலிருந்து முதன்முதல் எழுந்தது ஆலகாலவிஷம், பின்னர் எழுந் தவள் திருமகள். ஆலகால விஷத்தைப் பெற்றவர் சிவனார். திருமகளை அடைந்தவர் திருமால். பாற்கடல் அரனார்க்கு விஷத்தை அளிக்கவும், அரியார்க்குத் தேவியை நல்கவும் காரண மென்ன? அவரவருடைய உடை விசேஷமே என்று கவிஞர் கற்பனை செய்கிறார். திருமால் அணிந்திருந்த பொன்னுடை கண்டு அவருக்கு இலக்குமியையும் சிவபெருமான் தோலுடைகண்டு அவ ருக்கு விஷத்தையும் பாற்கடல் கொடுத்தது என்பதை,

"நாவல் பாற்கடலோ
மாலானவர் அணிபொன்னுடை
கண்டு மகளைத் தந்தே
ஆலை ஈந்தது தோலாடை சுற்றும்
அரன் தனக்கே"

என்று நயம்பட உரைக்கின்ற விடத்தும் பீதாம்பர உடையை அணிந்த திருமாலையே மாலானவர் என்று சிறப்பாய் அழைக்கின்றார்.

கடவுள் அன்பும், செய்ந்நன்றி யறிவும், பொருந்தப் பாடல் பாடிப் புகழ்பெற்ற நையாண்டிப் புலவரது செய்யுட்களைப் போற்றிப் படித்துப் பயன் பெறல் வேண்டும்.

## மானியமும் கோவில்களும்

யாவர்க்கும் கடவுள் வழிபாடு சாத்தியமாதற் பொருட்டு வகுக்கப் பெற்ற கோவில்கள்மலிந்த நாடு நம் நாடு. கோவில் இல்லாஊரில் குடி இருக்க வேண்டாம் என்ற பழமொழி நம் முன்னோர் தத்தம் ஊரிலே ஆலயம் அமைத்தலை அத்துணை அவசியமாகக் கருதி வந்தனர் என்பதை வலியுறுத்துவதாகும்.

"திருக்கோவில் இல்லாத திருவில் ஊரும்
திரு வெண்ணீறணியாத திருவில் ஊரும்
பருக்கோடிப் பத்திமையாற் பாடா ஊரும்
பாங்கினொடு பலதளிர்கள் இல்லா ஊரும்
விருப்போடு வெண் சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண் கொடியும் இல்லா ஊரும்
அருப்போடு மலர் பறித்திட்டுண்ணா ஊரும்
அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே"

என்றனர் அப்பர் சுவாமிகள். கோவிலில்லா ஊரும் ஆலய வழிபாடு நடவா ஊரும் ஊராகாது என்பது மாத்திரமன்று, அவைகள் மக்கள் வாழ்வதற்குரிய தல்லாத அடவியாம். காடாம் என்பது சுவாமிகள் பொன் வாக்கின் திரண்ட கருத்து.

புறநானூறு போன்ற சங்க இலக்கியங்களிலும் சிலப்பதிகாரம் போன்ற சங்கத்தை அடுத்த இலக்கியங்களிலும் கோவில்களைப் பற்றிக் காணப்பெறும் குறிப்புகள் பலப்பல.

"பணியிய ரத்தை நின்குடையே முனிவர், முக்கட் செல்வர் நகர் வலம் செயற்கே"

என்ற புறநானூற்று வரிகள் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியின் திருவெண் கொற் றக் குடை சிவபெருமானது பெரிய திருக்கோவிலை வலஞ் செய்வதற்கே தாழ்வது என்ற கருத்தைத் தெரி விப்பன. நகர் வலம் செயற்கே - கோவிலைப் பிரதக்ஷணம் செய்வதற்கு. அந்நாளைய கோவில்கள் நகர்போல சிறப் புத் தோன்றுவன, நகர் போல்வதால் கோவிலை நகர் என்றார். காவிரிப்பூம் பட்டினத்தில் இன்னின்ன கோவில்களில் திருவிழாக்கள் சீர்பெற நடைபெற்றன என்று கூறத்தொடங்கிய இளங்கோவடிகள்

"பிறவா யாக்கைப் பெரியோன் கோவிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோவிலும்
வால்வளை மேனி வாலியோன் கோவிலும்
நீலமேனி நெடியோன் கோவிலும்
மாலை வெண்குடை மன்னவன் கோவிலும்"

என்றிவ்வாறு வரிசைப் படுத்தி முறையே சிவபிரானுக் கும் முருக வேளுக்கும் பலராமருக்கும் திருமாலுக்கும் இந்திரனுக்கும் கோவில்கள் அமைந்திருந்ததைப் புலப் படுத்துவர்.

நம் நாட்டின் மிகப் புராதனமான கோவில்கள், சுண்ணாம்பு அல்லது களிமண்ணால் கட்டப்பெற்ற சுவர் களை யுடையன. மற்றைய பாகங்கள் மரத்தால் இயன் றவை. இத்தகைய கோவில்கள் நெடுங்காலம் நிலைத் திராதென்பது உண்மை. அந்நாளில் தமிழ் மன்னர் ஆல யங்களுக்கு நிலமாவது வேறு விதமான பொருளாவது தானம் செய்தனர் என்று உறுதியாக அறுதியிட்டுக் கூறுவதற்கில்லையென்றும், நீர்வார்த்துத் தத்தம் செய்து செம்புப் பட்டயத்தில் தான சாசனம் எழுதிக்கொடுப்

பது ஆரிய முறையாகத் தோன்றுகிறதென்றும் திரு. பி. டி. சீனிவாச அய்யங்கார் கூறுகின்ற கூற்று ஒரு வகையில் பொருந்துவதேயாகும் ஏனென்றால் இடைக் காலத்தில் ஏற்பட்டது போன்று மிக விரிந்த முறையில் நிகழ்த்தப் பெறும் ஆலய வழிபாடுகள் அந்நாளில் இருந் தில. எனவே அவற்றிற்கு நிலம் முதலியவைகளைத் தானஞ்செய்து மானியமாய் விடுதற்குரிய நெறிகளும் தேவையற்றனவாயின் கந்தழி, கொடிநிலை, வள்ளி, முருக வேள்விபோன்ற மிகப் புராதன வழிபாடுகளெல் லாம் மிகச் சுருங்கிய செலவில் செய்யப்படுவன. "சிறிய தினையரிசியைப் பூக்களோடே கலந்து வைத்து, மறியை அறுத்து, கோழிக்கொடியோடே வெண்சிறு கடுகை யும் அப்பி, அழகிய மலர்களைத்தூவி, இரண்டு துணி களை உள்ளொன்றும் புறமொன்றுமாக உடுத்தி, சிவந்த நூலினால் கையிலே காப்புக் கட்டி, வெள்ளிய பொறி யைத் தூவி, கிடாவின் உதிரத்தோடு பிசைந்த வெள் ளரிசியைச் சிறு பலியாக இட்டு பசு மஞ்சளோடு நறிய சந்தன முதலியவற்றைத் தெளித்து பெரிய குளிர்ந்த செவ்வலரி மாலைகளையும் அறுத்துப் பூங்கோவிலாகத் தூக்கி உதிரமளைந்த தினையரிசியையும் பரப்பிச் செய் யப்பெறும்" என்று முருகவேள் வழிபாடு இத்துணை விஸ்தாரமாகப் பேசப் பெறினும் இதற்குரிய செல வினம் சுருக்கமே என்பது கண்கூடு. எனவேதான் திரு. பி. டி. சீனிவாச அய்யங்காரின் கருத்தின்படி மிகப்புரா தனமாகச் செய்யப்பெற்ற வழிபாட்டு முறைக்கு மானி யம் வேண்டியதில்லா தாயிற்று என்க.

இனி, கோவில்கள் சிறந்து வழிபாடுகள் வைபவத் தால் பொலிந்த காலத்து அரசர்கள் மானியம் கொடுத் துப் பணிசெய்த வரலாற்றைக் காண்போம். பிராகிரு

தத்தில் அல்லது சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டு நம் கைக்கு அகப்பட்டுள்ள சாசனத்திலிருந்து பல்லவ மன்னர்கள் கோவில்கள் விஷயமாய்ச் செய்த அருஞ்செயல்கள் நன்கு புலனாகின்றன. சிவ கந்தன் என்ற பல்லவ மன்னனுக்குப் பின்னவனான விஜயசந்த வர்மனது மகன் விஜய புத்தவர்மன். இவ்விஜய புத்த வர்மனுடைய பத்தினியான சாருதேவி என்பவள் கி. பி. 300 ம் ஆண்டில் தலூரம் என்ற தலத்திலுள்ள கூளிமகா தரகம் என்று பெயர் பெற்ற திருமால் கோவிலுக்கு இருநூறு சதுர முழம் அளவுள்ள ஒரு நிலத்தை மானியமாகக் கொடுத்ததாக ஒரு ப ழ மை யா ன சாசனத்திலிருந்து அறிய வருகிறோம். சேர சோழ பாண்டியராகிய மூப்பெரும் வேந்தர்களில் திருக்கோயில் எடுத்து ஆலயப் பணிகளை அற்புதமாக ஆற்றியவர்களில் தலை சிறந்தவர்கள் சோழர்களே என்னலாம். பண்டைச் சோழர்களைப் பின்பற்றிய முறையில் சரித்திர கா ல த் தி ய பல்லவ சோழர்கள் கோவில்களைப் பெரிதாக்கினார். அவர்களைச் சீர்பெறப் புதுப்பித்தார்கள். திருச்சுற்றாலம், ஏழு நிலைமாடம், விமானம் முதலிய நூதன உறுப்புகளையும் புதிதாய்ச் சமைத்து ஆலயத்தை அழகு படுத்தினார்கள்.

ஆறும் நூற்றாண்டின் இறுதியிலும் ஒன்பதாம் நூ ற் ற ண் டி ன் தொடக்கத்திலும் காஞ்சியிலிருந்து ஆட்சி புரிந்த பல்லவ அரசர்கள் காலத்தில் கோவில் எடுத்தலில் ஒருவித மாறுதல் ஏற்பட்டது. ஆதியில் கோவில்கள் மரத்தாலும் செங்கல்லாலும் சுண்ணாம்பாலும் கட்டப்பட்டன. பல்லவர்கள் காலத்திலோ குடவரைக் கோவில்கள் என்ற நவமுறைக் கோவில்கள் தோன்றின. ம லை க ளை யு ம் பாறைகளையும் உட்புறமாகக் குடைந்த மண்டபம்போல் அ மை த் து பிரதிஷ்டை

செய்தனர். இச்செய்தி தென்னுற்காடு ஜில்லாவிலுள்ள மண்டகப்பட்டு என்ற இடத்தில் அமைந்த கல்வெட்டினுல் அறியப்படுகின்றது. சமண மதத்தினனுன மகேந்திரவர்மன் என்பான் சைவனுகவும், அவனுற் செய்யப்பெற்ற குடவரை ஜைனப்பள்ளிகள் அனைத்தும் சைவக் கோவில்களாக மாறின. திருச்சினுப்பள்ளியில் மேவிய தாயுமானவருடைய இலிங்க மூர்த்தியையும் கோவிலேயும் அமைத்தவன் இம் மகேந்திரனே.

இவனுக்கு அடுத்து ஆட்சிபுரிந்த மாமல்லன் குகைக் கோவில்களில் உள்ளேயன்றி வெளியேயும் பற்பல அழகிய வடிவங்களைச் செதுக்கி அமைத்தான். இவனுல் நிர்மாணிக்கப் பெற்ற கீர்த்தியுற்ற ஏழுரதக் கோவில்கள் இன்றுங் காணக்கூடிய நிலேயிலுள்ளன.

சிவசூடாமணி என்ற ராஜசிங்கப் பல்லவன் காலத்தும் அவன் மகன் இரண்டாம் பரமேசுவரன் காலத்தும் ஆக்கப்பெற்ற ஆலயங்கள் மாமல்லபுரத்துச் கடற்கரைக் கோட்டம் காஞ்சிபுரத்துக் கைலாசநாதர்கோவில் அந்நகரிலேயே உள்ள ஸ்ரீவைகுண்டப்பெருமாள் கோவில்.

இராஜ சிம்மன் (674. 680 கி. பி.) காலத்தில் எடுக்கப்பெற்ற கோவில்கள் மலேக் கோவில்கள், மலேகளைப் பெருங்கற்களாகப் பெயர்த்துச் செதுக்கப் பெற்றவை. இவற்றுக்குப் பிற்படவந்த நந்திவர்மன் எடுத்த கோவில்கள் பார்வைக்குப் பருத்த யானைகள் போல் தோன்றுவன. அப்பர் சுவாமிகள் வாக்கினின்றும் ஏறக்குறைய இக்காலத்தளவும் இக்காலத்திற்குச் சற்று முற்பட்டனவுமான கோயில்களைக் கண்டு கொள்ளலாம்.

"பெருக்காறு சடைக் கணிந்த பெருமான் சேரும்
பெருங் கோவில் கடி பொழில் சூழ் ஞாழற் கோவில்

கருப்பறியல் பொருப்பணைய குடிலக் கோவில்
இருக்கோதி மறையவர்கள் வழிப் பட்டேத்தும்
இளங்கோவில் மணிக்கோவில் ஆலக் கோவில்
திருக்கோவில் சிவனுறையுங் கோவில்''

என்று அவர் கோவிலின் வகைகளைக் கூறுவர்.

9-ம் நூற்றாண்டில் சோழர் ஆதிக்கத்தைத் தலையெடுக்கச்செய்த விஜயாலயன் என்பான் தஞ்சைக்கு சோழ அரசை நிறுவி கானமர் செல்வியாகிய நூக்கையில் நிகம்ப சூதனி என்ற பெயரோடு கோவில் அமைத்ததோடு புதுக்கோட்டை சமஸ்தானத்திலுள்ள நார்த்தாமலை என்ற சிற்றூரில் விஜயாலய கோளீச்சுவரம் என்ற கற்கோவிலையும் எடுத்தான். 879 லிருந்து 907 வரைக்கும் ஆட்சி புரிந்த விஜயாலயன் மகன் இராஜகேசவர்மனால் பல கற்கோவில்கள் உண்டு பண்ணப்பட்டன.

இராஜ கேசரியின் புத்திரனான முதற்பராந்தகன் தில்லை நடராஜப் பெருமானுக்குச் சிற்றம்பலங்கட்டி அதன் முகட்டைப் பொன்னால் வேய்ந்தான். இச்செய்தியை

"கோதிலாத் தேறல் குனிக்கும் திருமன்றம்
காதலாற் பொன் வேய்ந்த காதலனும்''

என்ற விக்ரம சோழன் உலாவின் இரு வரிகள் அழகுறத் தெரிவிப்பனவாம். மேலும் கோயிலுக்கும் கோவிற் பணிக்கும் நிபந்தங்களைப் பெருவாரிற்றாக ஏற்படுத்தியவன் இவ்வரசனே.

பராந்தகனின் மக்களான இராஜாதித்தன் கண்டராதித்தன் ஆகிய இருவரில் கண்டராதித்தன் சிவநேசச் செல்வனாய் விளங்கிய காரணத்தால் சிவாலயங்கள் ஏரா

ளம். இவன் மனைவி பிராட்டியார் செம்பியன் மாதேவி யார் கணவனை யொப்பவே சிவ பக்திக்கொண்டு பல கற் கோவில்களைச் சமைத்து அவற்றிற்கான நிபந்தங்களை யும் ஏற்படுத்தினுள்.

இனி சோழ வேந்தர்கள் எடுப்பித்த கோவில்களிற் பல்லாற்ருனும் தனிச்சிறப்பிற்குரிய இராஜ ராஜேஸ் வரம் என்ற தஞ்சைக் கோவிலைப் பற்றியும் அதற் கமைந்த மானியத்தைப்பற்றியும் கவனிப்போம். அருள் மொழி வர்மன் என்ற இயற் பெயரையுடைய இராஜ ராஜன் என்பவனுல் கட்டப்பட்டது இப்பெருங்கோயில். இவன் ஏற்கனவே தில்லை சிற்றம்பலத்திற்கு நிபந்தங் கள் ஏற்படுத்திய மகிமையால் இராஜ இராஜன் என்றும் சிவபாதசேகரன் என்றும் சிறந்த பெயர்களால் அழைக் கப்பெற்ருன். இவன் 1003ம் ஆண்டு இக்கோவில் எழுப் பத்தொடங்கியிருக்கலாம் என்று எண்ண இடமிருக் கிறது. இவன் இக்கோவிலுக்குப் பொன்னுபரணங்களும் பொற் சின்னங்களும் வழங்கியுள்ளான். "ஐம்பத்தைந் தாவது நாள் இருநூற்றெழுபத் தைந்தினுல் உடையார் ஸ்ரீராஜ ராஜ தேவர் ஸ்ரீராஜ ராஜேஸ்வர முடையார் ஸ்ரீ விமானத்துச் செம்பில் ஸ்தூபித்தறியில் வைக்கக் கொடுத்த செப்புக் குடம் ஒன்று" என்ற சாசனப் பகுதி யிலிருந்து இவன் கோவில் கும்பாபிஷேகத்திற்கும் பெருந்துணை புரிந்துள்ளமை ஊகிக்கப்படும். மேலும் இவனுல் வென்றடக்கப் பெற்ற பிற அரசர்களும் இக் கோவிற்பணியில் பங்குபெற்றுள்ளார் எனத் தெரியவரு கிறது. "சத்யாசாரனை எறிந்து எழுந்தருளி வந்து ஸ்ரீ பாத புஷ்பமாக அட்டித் திருவடி தொழுக திருப் பொற்பூ," என்ற பகுதி சாசனத்துள் காணப்படுவது கொண்டு, மேலை சாளுக்கிய மன்னன் சத்தியா சிரயன்

இவனால் வெல்லப்பட்ட பின்னர் பொற் பூக்களை இக் கோவிலுக்குக் கொண்டு அர்ப்பணித்த செய்தி அறியப்படும். இராஜ ராஜன் இப்பெருங் கோவிலுக்கு அமைய வேண்டிய எல்லாச் சிறப்பினையும் குறைவின்றிச் செய்து வருவதையே தன் வாழ்க்கையின் உறுபயனாகக் கொண்டான் என்பதற்குப் போதிய சான்றுகள் இருக்கின்றன. வீர பராக்கிரமம் நிறைந்த இம் மன்னன் போர்க்களத்தினின்றும் வெற்றியோடு திரும்புங் காலை தனக்குக் கிடைக்கும் பொருட்களில் விலையுறப்பெற்ற அரிய பெரிய பொருட்களை ஆலயத்திற்கு அர்ப்பணிக்கின்ற நல் வழக்கத்தைக் கைக்கொண்டிருந்தான். மூர்த்திகட்குப் பற்பல ஆபரணங்களையும் கோவில் கைங்கரியங்கட்குப் பாத்திரங்களையும் நெல்லினையும் கிராமங்களையும் நல்கினான். அன்றாட வழிபாட்டிற்கு வேண்டிய பொன்னும் பொருளும் உவந்து ஈந்தான். கோவில் பணியின் ஒவ்வொரு சிறு பகுதியிலும் பெருங்கருத்துச் செலுத்தினான். நாடோறும் கோவில் விளக்கொன்றிற்கு உழக்கு நெய் தேவைப்படும் என்று அறிந்த இம்மன்னவர் இவ் விளக்கேற்றும் பணி, முட்டின்றி நடைபெறுவதற்கு ஏதுவாக இடையர்கட்கு ஆடு, பசு, எருமை, என்ற மூவினமும் கொடுத்து விளக்கிற்கு வேண்டும் நெய் குறையாது சுரக்க வகை செய்தான். பெருஞ் சண்பக மொட்டு, ஏலவரிசி, இலாமிச்சம் ஆகியவற்றை ஊரவைத்து நறு நீரால் திருமஞ்சனம் நடைபெறச் செய்தான். சாதாரண காலங்களில் பழவரிசையாற் சமைத்த போனகம், நெய்யமுது, தயிரமுது முதலியனவும், அடக்காயமுதும், கறியமுதும், பருப்பு, பழவரிசி, மிளகு, சீரகம், சர்க்கரை, கடுகு, நெய் இவற்றோடு செய்யப்பெற்ற அப்பக்காயமுதும் கறியமு

தும், பொரிச்சுறியமுதும், மிளகு, சீரகம், சர்க்கரை, கொள்ளு, வாழைப்பழம், புளி, தயிர், நெய், கடுகு இவற்றைக் கொண்ட புளியங் கறியமுதும் படைக்கப் பெற்றன.

மேலும் ஸ்ரீகாரியம் பார்ப்பவர் என்ற பெயரோடு கோவில் காரியங்களைக் கவனித்து வந்தவர்களுக்குப் பேராதரவு தந்து வந்தான். இவ்வள்ளல் பாடியும் ஆடியும் பக்திப் பணி செய்தற்குரிய பாடகர்களையும், ஆடல் வல்லாரையும், சோழநாட்டுப் பிற கோவில்களிலிருந்து தருவித்து அவர்களுக்குக் கோவிலையடுத்த வடபுறத்திலும் தனித்தனி மனைகளைக் கட்டிக் கொடுத்தான். அவர்கள் ஒவ்வொருவருக்கும் நூறுகலம் நெல் விளைவதற்குரிய ஒவ்வொரு வேலி நிலத்தையும் ஈந்தான். இஃதன்றியும் கோயில் தொண்டர்களான பண்டாரிகள், கணக்கர், பரிசாரகர், திருவிளக்கிடுவோர், திருமாலை தொடுப்போர், கோலமிடுவோர், தையற்காரர், நாவிதர், வண்ணார் ஆகிய இன்னோருக்கு நாள் உணவிற்கு வேண்டிய நெல் ஊதியமாக வழங்கப் பெற்றது.

புகழ்பெற்ற ராஜ ராஜேஸ்வரர் கோவிலேயன்றி முதலாம் ராஜேந்திரன் தான் சென்று வெற்றியை நிலை நாட்டிய இடங்கள்தோறும் கோவில்களை அமைத்ததாகத் தெரிகின்றது. அவ்வக்கோவில்களுக்கு நிபந்தங்களை ஏற்படுத்தி அர்ச்சனையினர் தாம் வழிபாட்டினை ஏற்று நடத்துகின்ற முறையையும் ஊர்ஜிதப்படுத்தியவன் இராஜேந்திரனே. மைசூர் பிரதேசங்களிலுள்ள குவலாலபுரப் என்ற பழம் பெயரையுடைய கோலாரில் கிடைத்த சாசனமொன்றால் அவ்வூர் துர்க்காலயத்தில் பூசை முறைக்கு இவ்வரசன் செய்த ஏற்பாடு நன்கு

விளங்கும். அக்கோவிலில் பூசைக்கென சைவ பிராமணனும் பூசைப் பணிக்குதவ நான்கு பிரமசாரிகளும், அபிஷேக நீர் கொணர, திருமாலைகட்ட, சில பணியாளர்களும், ஆலயத்தைச் சார்ந்த நந்தவனத்தைக் காக்க மூன்று காவற்காரர்களும், மூன்று வைரவர்களும், நான்கு யோகீசுவரர்களும், தேவாரம் பாடுவோர் பத்துப் பெயர்களும் ஒரு கணக்கனும், இருபத்து நான்கு நடன மாதர்களும், ஒரு குயவனும், ஒரு வண்ணானும், ஒரு சோதியனும், மேற்பார்க்கும் அரசியல் பணியாளன் ஒருவனும், ஒரு தச்சனும், ஒரு கருமானும், வியாகரணம் முதலிய கலைகளைப் பயிற்றுவிக்க ஒரு ஆசானும் கோவில் காரியக்காரர்களாக ஏற்படுத்தப் பெற்றிருந்தார்கள். ஊர்ச்சபையினர் அவரவர் தம்தம் கடமைப்படி நெய், எண்ணெய், அரிசி, காய்கறி, பழம், சந்தனக் குழம்பு, சாம்பிராணி, கற்பூரம், பன்னீர், வெட்டிவேர், ஏலக்காய் முதலிய பொருட்களைக் கொடுத்து வந்தனர். கோவிலுக்கென தேவதானமாக நிலங்களிருந்தன. இவற்றைப் பயிரிட்டோர் விளைந்த தானியங்களைத் தாமே கோவில் அதிகாரியிடம் வந்து சேர்ப்பித்தார்கள். இன்னனைய குறிப்பான செய்திகளை நாம் குவலாலபுர சாசனத்தால் அறிந்து கொள்ளுகிறோம்.

பல்லவ ஆட்சியில் ஏற்பட்டிருந்த கிராம சபையும் கோவில் சொத்தினை நிர்வகித்தல், ஆலயப் பணியைச் செவ்வையாய் நடத்துதல் ஆகியவற்றையே முக்கிய அலுவலாய்க் கருதியது. ராமசிம்மேசுவரத்திலுள்ள கைலாசநாதர் கோவிலும், வைகுண்டப் பெருமாள் கோவிலும் பல்லவ அரசர்களின் கோவிற்பணியை பிரசித்தப்படுத்தும் பெருஞ் சின்னங்களாம். கோவில் நிலங்களைப் பாதுகாக்கின்ற வகையிலும் நாட்பூசைக்

குரியவற்றை ஏற்பாடு செய்கின்ற வகையிலும் சிற்சில குறைபாடுகள் நடைபெற்றன வென்று அவைகள் காலக் கிரமத்தில் நீங்கின வென்றும் தெரிய வருகின்றது. நந்திவர்ம பல்லவன் காலத்தில் கருட்பாச் சேரியிலுள்ள ஒரு நிலம் அடகு வைக்கப்பெற்ற காரணத்தால் நைவேத்திய கருமங்கட்குரிய பொருள்கள் குறைவு பட்டன வென்றும் புகழ்த்துணை விஜய அரையனால் அந் நிலம் மீட்கப்பட முன்போலவே வழிபாடுகள் குறைவின்றி நடக்க ஏதுவாயிற்று என்றும் திருவல்லிக்கேணி சாசனத்தால் அறியப்படுகின்றது.

அரசர்கள், கிராம சபைகள், பொதுமக்கள், கோவில் கைங்கரியத்தின் விஷயமாய்க் காட்டிய அளவிடற்கரிய பற்றுதலுக்கும் ஆர்வத்திற்கும் போதிய காரணமுண்டு. அந்நாளில் கோவில்கள் கோவில்களாக மட்டுமல்ல சிறந்த கல்வி நிலையமாகவும், மருத்துவ நிலையமாகவும், தர்ம நிலையமாகவும் அமைந்து மக்கள் உடல், அறிவு, ஆன்மவாழ்க்கை முன்னேற்றத்திற்குப் பெருந்துணை புரிந்து வந்தன.

---

உள்ளத்தில் நிகழும் உணர்ச்சியால் நிகழ்வது ஆட்டம். பக்தியாலும், அன்பாலும்,பரஸ்பர ஒற்றுமை நாட்டத்தாலும், குரோதத்தாலும், இன்ன பிற எழுச்சிகளாலும் தூண்டப்பெற்ற மக்கள் தங்கள் உணர்ச்சிகளின் போக்கு வீடாகக் கொள்வது கூத்து. இது அனுபவ சித்தாந்தம்; இயற்கையோடு இயைந்த ஓர் செயல் அந்தந்த நாடுகளில் அதனதன் இயல்பிற்கும் பக்குவத்திற்கும் பண்பாட்டிற்கும் ஏற்ப அமைந்து வளரும்.

கல்வியின் பயன் கடவுளைத் தொழுதல் என்று கண்ட தமிழ்ப் பெருமக்கள் கலைகளின் பயனும் கடவுளைத் தொழுதலாகக் கொண்டதில் வியப்பொன்றுமில்லை. நடனக்கலை இறைவனுடைய பேரியல்புகளைப் புலப்படுத்துவதற்கும், அவனது பெருந்தொழில்களை நினைப்பூட்டுவதற்கும் பயன்பட்டது. தில்லைக் கூத்தரசரின் பஞ்சகிருத்தியப் பரமானந்தத் திருத்தாண்டவம் நடனங்களிலெல்லாம் மிகத் தொன்மையுடையதாகவும் தூய்மை வாய்ந்ததாகவும் கருதப்படும்.

"தில்லை பெருமா னென்று நினையேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரான் கோயில் புக்குப்
புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடி
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடி
சங்கரா சய போற்றி போற்றி என்றும்
அலை புனல் சேர் செஞ்சடை எம் ஆதீ யென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே"

என்று திருநாவுக்கரசர் கூறுவது கொண்டு இறைவழி பாட்டில் கூத்தாடுதலும் ஒன்றாகக் குறிப்பிடப்படுதல் அறியலாம்.

இலௌகிகத் துறையிலும் கூத்தாடுங்கலை இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நல்ல நிலைமையில் இருந்தது. திருவள்ளுவர் ஆடரங்கத்தைக் கூத்தாட்டவை எனக்கூறுகின்றார். அவர் காலத்தில் கூத்தாட்டவைகளுக்கு ஆடரங்களுக்குச் செல்லுவோர் இக்காலத்தில் சினிமாப் படக்காட்சிகளுக்குப் போவார் போலவே பெருகி இருந்திருத்தல் வேண்டும்.

ஆட்டம் ஆண்பாலர், பெண்பாலர் ஆகிய இருபாலர்க்கும் பொது நாட்டியத்திற்குப் பொருத்தமான இன்னிசையும் மெல்லியல்பும் பெண்பாலர்க்கே பெரிதும் வாய்த்திருப்பது பற்றி, அது பெரும்பாலும் பெண்களாலேயே நிகழ்த்தப் படுகின்றது. கூத்தர் என்ற பொதுப் பெயர் இருதிறத்தாருக்கும் பொருந்துவதென்றாலும், இக்கூத்தர் பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம் போன்ற நூற்களில் ஆடல் மகளிர், ஆடற் கூத்தியர், காதற்கணிகையர் என்றே சிறப்பாக மகளிராகக் குறிப்பிடப் படுகின்றார்கள்.

சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதையில் ஆடரங்கத்தின் தோற்றம் ஆடும் மங்கையாரின் அம்சம், கூத்தின் வகைகள் ஆடல் ஆசிரியன் பெருமை, இசையாசிரியரின் இயல்பு, தண்ணுமை ஆசிரியரின் தன்மை ஆகியவை வெகு விரிவாகப் பேசப்படும்.

எண்ணிய நூலோர் இயல்பினில் வழாஅது
மண்ணகம் ஒருவழி வகுத்தனர் கொண்டு
புண்ணிய நெடுவரைப் போகிய நெடுங்கழைக்

கண்ணிடை ஒருசாண் வளர்ந்தது கொண்டு
நூல்நெறி மரபின் அரங்கம் அளக்கும்
கோல் அளவு இருபத்து நால்விரல் ஆக
எழுகோல் அகலத்து எண்கோல் நீளத்து
ஒருகோல் உயரத்து உறுப்பினது ஆகி
உத்தரப் பலகையோ டரங்கின் பலகை
வைத்த இடைநிலம் நாற்கோலாகி
ஏற்றவாயில் இரண்டுடன் பொலியத் தோற்றிய
அரங்கு

என அரங்கின் தோற்றத்தை ஆசிரியர் இளங்கோவடிகள் அழகுறத் தீட்டுகின்றார். இதிலிருந்து, சிற்ப நூலாசிரியர்கள் வகுத்த இயல்புகளிலிருந்து வழுவாத வகையில் அரங்கிற்கேற்ற குற்றமற்ற நிலப்பரப்பைத் தெரிந்து கொள்வர் என்றும், இந்நிலப் பரப்பிலே ஏழு கோல் அகலமும், எட்டுக்கோல் நீளமும் ஒருகோல் உயரமும் உடைய அரங்கினை அமைத்துக் கொள்வார்கள் என்றும், தளப்பரப்பிலுள்ள பலகையிலிருந்து தூணில் வைத்துள்ள பலகைக்கு நான்கு கோல் அளவு உண்டு என்றும், அரங்கத்திலே உட்புகவும், புறஞ்செல்லவும் இருவாயில்கள் உண்டு என்றும் அறிகின்றோம். ஒரு கோலின் அளவு உத்தமன் ஒருவன் விரற்கிடை இருபத்து நான்கு.

இவ்வாறு சித்தரிக்கப்பெற்ற அரங்கத்தினை

தொழுதனரேத்த
பூதரை எழுதிய மேனிலை வைத்து
தூண்நிழற் புறப்பட மாண்விளக்கு எடுத்தாங்கு
ஒருமுக எழினியும் பொருமுக எழினியும்
கரந்துவரல் எழினியும் புரிந்துடன் வகுத்தாங்கு

ஓவிய விதானத்து உரைபெறு நித்திலத்து
மாலைத்தாமம் வளையுடன் நாற்றி
விருந்துபடக் கிடந்த அருந்தொழில் அரங்கம்

எனவும் விதந்தோதுகின்றனர் சிலப்பதிகாரம் தந்த செம்மல். வச்சிரதேகன், வச்சிரதத்தன், வருணன், இரத்தகேசுரன் என்று சொல்லப்பட்ட நான்கு பூதங்களின் உருவமும் தொழிலும் விளங்கும்படியாக இவைகளின் வடிவம் அரங்கத்தின் மேனிலையில் செதுக்கப் பட்டிருக்கும். அவ்வரங்கத்தின் விளக்குகளுக்கு ஒரு விசேஷம் உண்டு. அவ்விளக்கொளி காரணமாக ஏற்படும் தூண்நிழல் அவையிற்படுவதில்லை. தொழில் நுட்பம் வாய்ந்த மூன்றுவகையான திரைகளுண்டு. அவை ஒருமுக எழினி என்றும், பொருமுக எழினி என்றும், கரந்துவரல் எழினி என்றும் பெயர் பெறும் அரங்கத்தின் விதானம் சித்திர வேலைப்பாடுகளுடன் திகழும். அவ்விதானத்திலிருந்து புகழமைந்த முத்து மாலைகள் தொங்கவிடப் பெற்றிருக்கும்.

அரங்கில் தோன்றும் நடனசுந்தரி தாது அவிழும் மலர்களை அணிந்தவள். கடை குழன்று சுருண்ட கூந்தலை யுடையவள். ஆடல், பாடல், அழகு என்று சொல்லப்பட்ட மூன்றில் ஒன்றும் குறையாதவள். ஆடும் மகளிர் மிகுதியாக மலர்களை அணிவர் என்பதற்குப் புறநானூற்றிலே நல்லதொரு குறிப்பினைக் காண்கின்றோம். சோழன் நலன்கிள்ளி என்பவன் அறம் வளர்த்த பெருமன்னன். அவனது நாட்டு மக்களும் அறக்கருத்துடைய நன்மக்கள். அவன் நாட்டில் வயலிலுள்ளோர், வேலிக்கு வெளியே போகின்ற மக்கள் தின்னும்படியாக கரும்பினைப் பிய்த்து எறிவார்கள். அக்கரும்பு தாமரைப் பாத்திகளில் வீழ்ந்து பூக்களைச் சிதைக்

கும். அவ்வாறு சிதைக்கப்பெற்ற பூக்கள் கிடக்கும் இடம் கூத்தாடு களத்தில் பூக்கள் சிதறுண்டு கிடத்தலை ஒத்திருக்கும். இது முது கண்ணன் சாத்தனார் கூறுவது.

கூத்து, அகக்கூத்து என்றும், புறக்கூத்து என்றும் பகுக்கப்படும். சிலர் அரசர்க்கென ஆடுவதை அகக்கூத்துள்ளும், ஏனையோர்க்கு ஆடுவதைப் புறக்கூத்துள் அடக்குவர். இவையே வேத்தியல் என்றும் பொதுவியல் என்றும் பெயர் பெறுவன. இஃதன்றி கூத்துக்கள் சாந்திக்கூத்து எனவும் விநோதக்கூத்து எனவும் பாகுபடுத்தப் பெறுவதுண்டு.

சாந்திக்கூத்து, சொக்கக்கூத்து, மெய்க்கூத்து, அவிநயக்கூத்து, நாடகக்கூத்து என நால்வகைப்படும். சொக்கக்கூத்து என்பது தாவலயத்தை ஆதாரமாகக்கொண்ட சுத்த நிருத்தம். மெய்க்கூத்து என்பது உள்ளக் குறிப்பை ஆதாரமாகவுடையதொரு கூத்து. அவிநயக் கூத்தென்பது கதை தழுவாது பாட்டின் பொருளுக்கேற்ப கைகாட்டி வல்லபஞ் செய்யும் கூத்து. நாடகக் கூத்தென்பது கதை தழுவி வருங்கூத்து. இந்நான்கும் தலைவன் சாந்தமாதற்பொருட்டு ஆடப்பெறும். ஆதலின் சாந்திகூத்து என்பதில் அடங்கும். விநோதக்கூத்து என்ற பகுப்பில் குரவை, கலிநடம், குடக்கூத்து, கரணம், நோக்கு, தோற்பாவை என்பன இடம் பெறும். குரவைக்கூத்து என்பது மகளிர் கைகோத்து ஆடுங்கூத்து, கலிநடம் என்பது கழைக்கூத்து. குடக்கூத்து என்பது அசுரரைக் கொல்ல அமரர் ஆடிய பதினொரு கூத்துக்களுள் ஒன்று. கரணம் என்பது படிந்தாடுங் கூத்து. நோக்கு என்பது நுட்பத் தன்மை யுடையதும் மாயத்

தன்மை அமைந்ததுமான கூத்து. தோற்பாவை என்பது தோலால் இயன்ற பொம்மைகள் ஆடும் பொம்மைக் கூத்து.

ஆடல் ஆசிரியன் அகக்கூத்து புறக்கூத்து ஆகிய இருவகைக் கூத்தின் இலக்கணம் அறிந்தவன். இவ்விரு பெரும் பகுதிகளில் அடங்கிய பல பெருங் கூத்துக்களையும், அக்கூத்துக்களுக்குரிய பாட்டுக்களையும், அக்கூத்துக்களின் விகற்பங்களுக்கெல்லாம் அமைந்த வாத்தியக் கருவிகளின் கூறுகளையும் நூல்வழி அறிந்தவன். நூல் அறிவு மட்டுமல்ல; தானே ஆடவும் பாடவும் வல்லவன்.

இசை ஆசிரியன் யாழால் பாடும் பாடலும், வங்கியத்தால் பாடும் பாடலும் மிடற்றுப் பாடலும் வல்லவன். பாடுதலின்றி ஆடுதலிலும் தேர்ந்தவன். தேசாந்தரங்களின் மொழிகளையும் அறிந்தவன்.

தண்ணுமை ஆசிரியன் ஆடல், பாடல் இசை இவற்றில் தேர்ந்தவன். இவையன்றி எல்லாப் பண்களும், இருவகைத் தாளங்களும், எழுவகைத் தூக்குக்களும் அறிந்தவன். யாழ்ப் பாடலும், குழற் பாடலும், கண்டப் பாடலும் இசைந்து நடக்கின்றபடி கேட்போர் செவிக் கொள்ளுமாறு முழவினை விரலின் செய்கையாலே குறியறிந்து இயக்கவல்லவன்.

ஆடல் ஆசிரியன், இசை ஆசிரியன், தண்ணுமை ஆசிரியன் ஆகிய இப்பேராசிரியர் துணையோடு, கவிஞன் குழல் ஆசிரியன், யாழாசிரியன் இன்னவரின் உதவியால் அரங்கத்தின் இசையும் நடனமும் இனிது சிறக்கும்.

மிகப் பெருஞ் செலவில் கலைவல்லாரின் அரிய நன் முயற்சியில் அமைக்கப் பெற்றிருந்த அரங்கிலே நடன மகளிரின் நாட்டியம் நனி சிறந்திருந்தது போலவே, நாடெங்கும் சுற்றித் தம் கலை நலம் பரப்பிவந்த வறிய கூத்தாரின் நடனமும் மிகச் சிறந்து விளங்கியது. இக் கூத்தர் மக்கள் ஆதரவைப் பெற்றிருந்தனர் மன்னர் பரிபாலிப்பையும் பெற்றிருந்தனர். அக்காலத்திய அரசர் களும், வள்ளல்களும், கூத்தருக்குப் பொன்னும் பொரு ளும் வழங்கினர்கள். கோப் பெருஞ் சோழன் என்ற மன்னர் பெருந்தகை "ஆடுநர்க் கீத்த பேரன்பினன்" என்று புகழப்படுகிருன். பாண்டியன் ஒருவன் கூத்தர்க் குப் பசும்பொன்னை வாரிக்கொடுத்தான் என்ற வரலா றும் உண்டு. "செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீந் தோன்" என்று இவனது கொடைத்திறம் பேசப்படு தல் காண்க. வயிரியர் என்பவர் கூத்தாடுவோர்.

பாரியின் பறம்புமலை சேர சோழ பாண்டியராகிய மூவேந்தராலும் முற்றுகையிடப் பெற்றது. அவர்தம் முற்றுகை பலன்தரவில்லை. இவ்வேளை கபிலர் என்பவர் அவர்களை நோக்கி "நீங்கள் எவ்வளவு காலம் போரிட்டு முயன்றாலும் பயனில்லை; நீங்கள் கூத்தர் வேடங் கொண்டு ஆடிப்பாடி வருக. பாரி தன் நாட்டையும் மலையையும் ஒருங்களிப்பான்" என்று உறுதி கூறினர்.

"மரந்தொறும் பிணித்த களிற்றினி ராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினி ராயினும்
தாளில் கொள்ளலிர் வாளில் தாரலன்
யான் அறிகுவன் அதுகொள்ளு மாறே
சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரைவொலி கூந்தல் நும் விறலியர் பின்...

ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்றும் ஒருங்கீ யும்மே''

என்ற கபிலர் பாட்டு பாரி மன்னன் ஆடுவோரை ஆத ரித்த பான்மையை நன்கு புலப்படுத்தும்.

ஆடுங்கலை நம் நாட்டில் மிகப் பழமையான காலந் தொட்டுச் சிறந்ததொருகலையாக நிலவி வருகின்றது. கண்ணுக்கும், காதிற்கும், கருத்திற்கும் ஒரு சேர இன் பந்தருவது இக்கலை. கவலையைத் தீர்ப்பது இக்கலை; ஒடிந்த உள்ளத்தை உருவாக்குவது இக்கலை; சிதைந்த சிந்தைக்கு ஜீவன் அளிப்பது இக்கலை; இறைவழிபாட் டிற்குப் பயன்படுவதாகவும், இன்பப் பொழுது போக் குக்கு இடந்தருவதாகவும், நவ நாகரிகக் கலையின் நல்ல அம்சமாகவும் உள்ள நடனம் அன்று வாழ்விற்கு வள மும், உரமும் தரும் உயிர்க்கலையாக விளங்கியது என் றும் அவ்வாறே விளங்குதல் வேண்டும்.



## சிறுபஞ்ச மூலம்

சிறுபஞ்ச மூலம் என்னும் சீரிய செந்தமிழ்ப் பனுவல் சங்க மருவிய தொகை நூற்களாகிய பதினெண் கீழ்க் கணக்கு நூற்களில் ஒன்றும். கணக்கு என்னுஞ் சொல், நூல் என்னும் பொருளுடையது. இதனைக் கணக்கு வழக்கு என்னுஞ் சொற்றொடரில் வைத்துக் காணலாம். "கணக்கு வழக்கின்றி" என்றால் நூல் வழக்கு இல்லாமல் உலக வழக்கு இல்லாமல் என்பதே பொருந்தும் பொருளாம். சங்க காலத்தில் சிறந்த இலக்கிய நூல் ஆசிரியராகவும், அந்நூல் விரிவுரையாளராகவும் விளங்கியவர்கள் கணக்காயர் என்று அழைக்கப் பெற்றமையும் கருதத்தக்கது. கணக்கு என்பது ஆன்றோர் உரையிலும் பொது மக்கள் பேச்சிலும் நூல் என்ற பொருளில் பயிலப்பட்டுள்ளது. சங்கப் பாடல் தொகுதிகள் பாட்டுகளினுடைய அடிகளின் பெருமை சிறுமை கருதி மேற் கணக்கு நூல்கள் என்றும் கீழ்க் கணக்கு நூல்கள் என்றும் பிரிக்கப்பட்ட நிலையில் சிறுபஞ்ச மூலம் அடிச்சிறுமையால் கீழ்க்கணக்கு நூலாயிற்று.

கீழ்க்கணக்கு நூல்கள் இவை என்று கூறுகின்ற வெண்பாவில் சிறு பஞ்ச மூலம் ஒன்றே சிறந்த என்னும் பொருள் தருகின்ற 'மா' என்ற அடைமொழியோடு பேசப்படுகின்றது. "நாலடி நான்மணி நானாற்பதைந்திணை முப்பால் கடுகங் கோவை பழமொழி மாமூலம்." என்பது அவ்வெண்பாவின் பகுதி. இது ஒப்புயர்வற்ற திப்பிய நூலாதல் பற்றியே இதனை ஆன்றோர் மாமூலம் என்று உவந்தழைத்தனர் என்க.

மருத்துவ நூற்களில் சொல்லப்படும் கண்டங்கத் திரிவேர், சிறு வழுதுணைவேர், சிறு மல்லிவேர், பெரு மல்லிவேர், நெருஞ்சிவேர் ஆகிய ஐந்து வேர்களினின் றும் வடிக்கப்பெற்ற கஷாயம் மக்கள் பிணியை நீக்கி நலந்தருவது, அப் பெற்றியே இந்நூலில் அடங்கிய ஒவ் வொரு செய்யுளிலும் இருப்பனவாகிய ஐந்து ஐந்து பொருட்களின் சாரம் படித்துணர்வோரின் மனப் பிணியை அகற்றி மதி நலந் தரும் மாண்புடையதாகும்.

இந்நூலின் பெயர்க்காரணம் இதன் இரண்டாம் செய்யுளில் நன்கு விளக்கப்படுகின்றது. அச் செய்யுள்,

"ஒத்த ஒழுக்கம், கொலை, பொய் புலால் களவோடு
ஒத்தற இவையலவோர் நாவிட்டு—ஒத்த
உறுபஞ்ச மூலந்தீர் மாரிபோற் கூறீர்
சிறுபஞ்ச மூலம் சிறந்து"

என்பது இதன் பொருள் பஞ்சத்தின் காரணத்தை நீக்கும் மழையைப் போன்று நோய்களைத் தீர்த்து நலத்தை உண்டாக்கும் பஞ்ச மூலங்களை ஒத்து மக்கள் மனத்தகத்திருந்து ஒழுக்க ஈனம், கொலை, பொய், புலால் உண்ணல் களவு ஆகிய ஐந்து மனக்கோட்டம் போக் கும் இந்நூலை கல்விமான்களே, நீங்கள் யாவர்க்கும் எடுத்துக் கூறுங்கள் என்பதாம். மக்களின் தீக்குணங்க ளைப் போக்கி அவர்க்கு நன்மை பயப்பதால் இந்நூல் மாரியோடு ஒற்றுமை பெற்றது, மாரிக்கும் மன்பதை யின் துன்பம் துடைத்து இன்பஞ் செய்தலே இயல்பாத லின்.

இந்நூலாசிரியர் காரியாசான் என்பவர் மாக்காய னார் என்பவரின் மாணாக்கர். இச்செய்தி 'மல் இவர்

தோள் மாக்காயன் மாணுக்கர்' என வருகின்ற பழம் பாட்டால் அறியலாம்.

காரியாசான் சமணர் என்பதற்குரிய சான்றுகள் இவர் தம் நூலில் இருக்கின்றன. சமணக் கொள்கைகளும், சமண விதிகளும் சமண ஆசார சீலங்களும் இந் நூலில் யாண்டும் காணப்படுகின்றன. "மூவர் முதலா உலகம் ஒரு மூன்றும் ஒத்த" என்று சமண முனிவர் திருத்தக்க தேவர் சீவகசிந்தாமணியில் கூறியதை ஒரு புடை ஒத்து "மூவான் பாதம் பழுதின்றி யாற்றிப் பணிந்து" என்று நமதாசிரியர் தம் நூலில் கடவுள் வாழ்த்துச் செய்யுளில் குறிப்பிடுவர்.

இக் கடவுள் வாழ்த்தை உள்ளிட்டு 97-வெண்பாக் களினுல் இயன்றது இந்நூல். பிறப்பின் பயன், வாழ்வு நெறி, இல்லறப் பெருமை, துறவறமேன்மை, தவத்தின் தன்மை, தானச் சிறப்பு, வீரர் உயர்வு, விழுப்பஞ்சேர் கல்வி முதலிய எல்லோர்க்கும் நலம் பயக்கும் இன்பப் பொருட்களை இனிய வெண்பாக்களில் இந்நூல் தந்து நிற்கின்றது. "நட்டாரை யாக்கிப் பகை பணித்து........
..........................................................................தொட்டுத் தொடங்கினுர் இல்லகத்தன்பின் துறவா உடம்பினுல் ஆயபயன்'' இதனுல் கூறப்பட்டன மக்கள் பிறப்பின் பயன்களாம். தம் நண்பர்களைச் செல்வ முதலியவற்றில் முன்னேறச் செய்வதும், பகைவர் தம்மேற் செல்லாத வாறு அடக்கி ஆளுதலும், இல்லக் கிழத்தியோடு இன் புற்றிருத்தலும், சுற்றத்தாரிடம் பரிவு நீங்காதிருப்ப தும், ஒரு மனிதன் தன் வாழ்க்கையின் பெரும் பயனைக் கொள்ளக்கூடியன என்கிருர் நம் புலவர். உண்மை யாய் வாய்த்த நண்பரே உற்றுழி உதவுவார் ஆதலின்

அவர் செல்வத்தில் விருத்தி அடைதல் தமக்கே சிறப்பாம் எனக்கருதி அதற்காவன செய்தல் வேண்டும் என்றார்; பகைவரை அடக்கினால் அவரால் துன்பம் நிகழாது. மனைவியோடு ஒருமித்து வாழ்தல் செவ்வனே இல்லறம் நடத்துதற்கு இன்றியமையாதது. சுற்றத்தாரிடம் பரிவு செலுத்துவதனால் நம்மைச் சுற்றி இருக்கும் அன்னவரால் என்றும் துணை உண்டு. தாய் தந்தையரிடத்து வாஞ்சையோடு இருத்தல் புகழிற்கும் புண்ணியத்திற்கும் அடிப்படையாகும். மனிதப் பிறப்பின் பெருமை அதுவோ இதுவோ எதுவோ என்று மலையற்க, சார்ந்தாரைச் சார்ந்து தகவொழுகும் தன்மையே பிறப்பின் பயனும் என்று தெளிவுபட நிறுவுகின்ற திறம் போற்றற் குரியது.

வையத்து வாழ்வாங்கு வாழ விழைவார் பலர். வழி தெரிந்திலராய் விழிப்பாரும் பலராவர். காரியாசான் போன்ற புலவர் பெருமக்கள் மக்கள் ஓல்லும் வகை செல்லத்தக்க உயர் வழியைத் தெள்ளிதில் வகுப்பர். நமது ஆசிரியர் காண்பிக்கும் நெறி இதுவாம்.

"தான் பிறந்த இல் நினைந்து தன்னைக் கடைப்பிடித்து
தான் பிறராற் கருதப் பாடுணர்ந்து—தான் பிறராற்
சாவவெனா வாழான் சான்றோரால் பல்யாண்டும்
வாழ்கவென வாழ்தல் நன்று"

ஒருவன் தான் தோன்றிய குடும்பத்தின் உயர்வை எண்ணிப் பார்த்து, தனது இயல்பைச் செவ்விதின் அறிந்து, பிறராற் போற்றப்படுதற்குரிய பெருமையைத் தெரிந்து, இறந்து ஒழிக என்று சபிக்கப்படாதவனாகி, பல நற்குணங்களாலும் நிறைந்த பெரியோர்களாலே பல்லாண்டு வாழ்க என்று சொல்லும்படியான

தகுதியைப் பெற்று வாழ்தல் வேண்டும் என்பது இதன் பொருள். தன்னைக் கடைப்பிடித்து என்றதனால் தன் இயல்பை அறிந்து தன் மனம் சென்ற வழி என்பதனைக் குறியாது தன் நிலையை அறிந்து, தனது இயற்கையான ஆற்றல்கள் குறைபாடுகளை அலசி அறிந்து அறிந்த தன்மைக்கு ஏற்ப நன்மை கடைப் பிடித்தல் வேண்டும் என்பதைக் கூறினர். சான்றோரால் எண்ணப்பட வேண்டாதார் யார்? யாருமில்லை, எனவே பெரியோரால் எண்ணப்படுதலும், அவரால் பல்லாண்டு வாழ்க என்று போற்றப்படுதலும், நல் வாழ்க்கை நெறியில் எல்லோராலும் நாடத்தக்கன, ஆதலின் சான்றோராற் பல்யாண்டும் வாழ்கவென வாழ்தல் நன்று என்று தெரிவித்தார்.

துறவறம் எல்லா அறங்களிலும் சிறந்துயர்ந்து நிற்பதாய், உலககாரியங்களை ஒரு சேர ஒழித்து ஆன்ம ஈடேற்றம் பெறுகின்ற வழியில் அதிதீவிர உழைப்பிற்கு இடந்தருவதாய் இயல்கின்ற பெற்றியதெனினும் அது சாமான்யரால் சாதித்தற்கரியதால் பெரும்பாலரால் தழுவப்படாதிருக்கின்றது. என்றாலும் இல்லறத்தாரும் துறவறத்தாரோடு சமத்துவமாய் நடக்க வழி கூறுகின்றார் நப் புலவர். "புல்லறத்தின் நன்று மனைவாழ்க்கை போற்றுடைத்தேல் நல்லறத்தாரோடு நடக்கலாம்" இல்லற வாழ்க்கையானது துறவி முதலியவர்களைப் பேணுதல் உடைத்தாயின் மனிதர் சார்கின்ற இல்லறம் துறவறம் ஆகிய இரண்டனுள் நன்மையாகிய அறத்தினராம் துறவறத்தாரோடு சமத்துவமாக நடத்தலாம். இல்லறத்தான் துறவறத்தானைப் போற்றக் கடமைப் பட்டுள்ளான். துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும்

இல்வாழ்வான் என்பான் துணையாதலின் கடமையைச் செய்தல் சிறந்த அறம்: அது பேரறமாகிய துறவறத்தோடுங்கூட சமநிலையில் உணவு கொள்ளும் நீர்மையது. இக்கருத்தினையே புல்லறத்தின் நன்று மனைவாழ்க்கை போற்றுடைத்தேல் நல்லறத்தாரோடு நடக்கலாம்" என்ற வாசகத்தால் உணர வைக்கின்றார்.

துறவறம் இனிது நடைபெறப்பொறை இன்றி மையாது. பொறுமையின்றேல் துறவறமில்லை. பொறுமை யோடிருக்க இயலாவிடின் துறவி இல்லற மடைதலே நலம் என்று நம்புலவர் நவில்வர்.

"போர்த்தும் உரிந்திட்டும் பூசியும் நீட்டியும்
ஓர்த்தொருண்பான் மறைத்துண்பான மேய்—ஓர்த்த அறமாமேற்
சொற்பொறுக்க அன்றேல் கலிக்கண்ணா
துறவறம் பொய் இல்லற மேவாய்"

உடல் முழுமையும் தோன்றாமல் ஆடையால் மூடியும், உடுத்த ஆடையைக் களைந்திட்டும், தேகமுழுவதும் வெண்மையான நீறு பூசியும், சடை வளர்த்தும், ஆராய்ந்து உடம்பின் ஒரு பக்கத்தினை மறைத்தும், உணவு உண்ணும் பொருட்டு உலகத்தவரிடம் சென்றும் மேற்கொள்ளப்படுவதான துறவறம் ஒருவனுக்குரியது ஆமானால் உலகத்தவர் தன்னை இழித்துக் கூறும் பழிச்சொற்களைப் பொறுக்கக்கடவன். இல்லையேல் துறவறம் பொய்யாகும். இல்லறமென்பதே உண்மையுடையதாகும். ஆடை போர்த்தல், களைந்திடுதல், நீறு பூசுதல், சடை வளர்த்தல், உடம்பின் ஒரு பாகத்தை மறைத்தல், ஆகிய இவ் வைந்தும் தவஞ் செய்வோர் வேடம். ஒருவன் இவ்வேடங்களைத் தாங்கி துறவு பூண்டு பொழுதினை எல்லாம் பகவத்தியானத்தில் கழித்தவனாக உணவின்

பொருட்டு உலகத்தவரை நாடி வருகிறான் போலித் துறவி இவன் உண்மைத் துறவி இவன் என்று பகுத்துணரும் ஆற்றல் இல்லாத மக்கள் "இவனுக்கு வாழ்வதற்கு வேறு வழியில்லை போலும் அல்லலின்றி ஆகாரங்கொள்ள சாமியார் வேடம் தாங்கி வந்திருக்கிறான்" என்று பழித்துரைக்கவும் கூடும், இப்பழிச் சொல்லையும் துறவி பொறுத்துக் கொள்ளவேண்டும். அத்தகைய பொறுக்கு மாற்றல் இலனாயின் அவன் துறவு நிலை பெறாது.

தவத்துக்குரியவன் இன்னின்ன செயல்களை விடல் வேண்டுமென்பார்,

"உயிர் நோய் செய்யாமை உறுநோய் மறத்தல்
செயிர் நோய் பிறர்கட் செய்யாமை — செயிர் நோய்
விழைவு வெகுளி இவை விடுவானாயின்
இழிவு அன்று இனிய தவம்"

இதன் பொருள் ஒருவன் பிற உயிர்க்குத் துன்பஞ் செய்யாமலும், பிறவுயிர்களால் தனக்கு வரும் துன்பத்தைப் பொறுத்தும், கோபத்தால் பிறருக்குத் தீங்கு செய்யாமலும் இருந்து விருப்பு வெறுப்பினை நீக்கி விடுவானாயின் அவனால் செய்யப்படுந் தவம் இனிமையுடையது என்பது. முதலிரண்டடிகளில் "உற்ற நோய் நோற்றல் உயிர்க்குறுகண் செய்யாமை அற்றே தவத்திற்குரு" என்ற பொய்யிற் புலவர் பொருளுரையைத் தன் செய்யுளிற் பெய்திருக்கின்றனர். "அழுக்காறவா வெகுளி இன்னாச் சொல் நான்கும் இழுக்காவியன்ற தறம்" என்னும் வள்ளுவர் வாக்கின் கருத்தை விழைவு வெகுளி இவை விடுவான் என்று தவத்தோர் மேலேற்றிக் கூறியதிற் காணலாம்.

தானஞ்செய், செய்கின்ற தானம் அளவிற் சிறிய தாயினும் பலனிற் பெரியதாகும். இக்கருத்தினை விளக்கு கின்றார்.

"வெந்தீக்காண் வெண்ணெய் மெழுகுநீர் சேர் மண்ணுப்
பந்தன் மகன் சார்ந்த தந்தையென்று—ஐந்தினும்
ஒன்று போலுண்ணெகிழ் தீயிற் சிறிதெனினும்
குன்று போல் கூடும் பயன்"

என்று கூறுவர். வெப்பத்தோடு கூடிய நெருப்பினை நெருங்குகின்ற வெண்ணெய்யும் மெழுகும் நீரைப்போல உருகிவிடும். நீரோடு கலந்தால் மண்ணும் உப்பும் அந் நீரைப் போலவே கரைந்தோடிவிடும் மகனைச் சார்ந்த தந்தையின் மனம் பரிவால் இளகுவதியல்பு. வறுமைத் துன்ப முடையாரைக் காணில் அவர்க்கு வெறுமனே அவர் வேண்டுவன வழங்குவதில் யாதும் பயனில்லை. மேற் கூறப்பட்டவை போல உருகவேண்டும் உருக் கத்தால் செய்கின்ற, உள்ளக்கசிவால் செய்கின்ற தரு மமே சிறந்தது. எனவே தானத்தின் சிறுமை பெருமை அதன் அளவால் அளந்தறியப் படுவதன்று. கொடுப் போன் உள்ளப் பண்பால் அறியப்படுவதாம்.

மனிதன் கற்க வேண்டும்; கல்வியால் அறிவைப் பெறுகின்றான். அறிவைப் பெறுவதன்றி வானவர் தன்மையையும் பெறுகின்றான். இது பற்றியே தேவரே கற்றவர் என்று கூறுகின்றார். உயர்ந்த நூல்களைக் கற்ற றிந்தவர் இவ்வுலகில் அறநெறி யொழுகி தான தருமங்க ளைச் செய்து புண்ணியம் பெற்று, அப்புண்ணியத்தால் வான்வீட்டை அடைவார் இது உறுதி என்பதைச் சுட்டி "தேவரே கற்றவர்" என்று தேற்றேகாரத்தால் குறிப்பிட்டார்.

அறிவு, இயற்கை அறிவு செயற்கை அறிவு என இருகூறாய் நிற்கு மென்றும், அவ்விருகிற அறிவைப் பெற்றார் வயதால் மூப்புடையவர் இல்லையென்றாலும் அறிவால் முதியவர் ஆவார் என்றும் அதனால் போற்று தற்குரியவர் என்றும் அதிலுஞ் சிறப்பாய், பிறர் எடுத்துக் கூறாமல் தாமே அறிவை விருத்திசெய்து கொள்வார், இன்னும் போற்றுதற் குரியாரென்றும் பொருள் பட,

"பூவாது காய்க்கும் மரமுள நன்றறிவார்
மூவாது மூத்தவர் நூல் வல்லார்—தாவா
விதையாமை நாறுவ வித்துள மேதைக்
குரையாமை செல்லு முணர்வு"

என்றார். மரங்கள் மலரைத் தோற்றுவித்து அதன் பின்னரே காய்க்கக் காண்கின்றோம். என்றாலும், அத்தி, ஆல முதலிய மரங்கள் பூவாமலே காய்ப்பனவாம். இவ்வாறு பூவாது காய்க்கின்ற மரங்களைப்போல நன்மையைத் தாமே அறியுந் தன்மையால் இளமைப்பருவ முடையவர்களாயிருப்பினும் முதியவர்களை யொத்த பெருமையுடையவர்களாகின்றனர். நல்வழியை யறிந்தவர்களிடம் பெருந்தன்மையான பண்புகள் ஏற்பட்டு விடும் நூலுணர்ச்சி பெறுதலும் சிறந்த பண்புகள் உண்டாவதற்கு வழியாம். வயது முதிர்ந்தவர்கள் உலக அநுபவங்களைக் கண்டு கண்டு நன்மை தீமைகளைப் பகுத்து உணர்ந்து உணர்ந்து பலகாலும் நற்குணங்களைப்பயின்று பயின்று அடக்கம் பொறுமை முதலிய சாந்தகுணங்களைப் பெற்று ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோராய் விளங்குவர். இளமைப் பருவத்தினர் அவர் பருவத்திற்கேற்ற துடிப்பும் நடிப்பு முடையவராய்ப்

பொறுமையற்றவராய், உலக அநுபவ மில்லாதவராய்க் காணப்படுவர். இதுபற்றியே வயதால் மூத்த பெரியோரைப் பெருந்தன்மை யுடையவராயும் சிறியவரை அவரது பருவத்தைச் சார்ந்த பொறுப்பற்ற தன்மை யுடையவராயும் கூறுதல் உலக இயற்கை என்றாலும் சில இளைஞர் நன்மையுணர்ச்சி நூலுணர்ச்சி என்ற அறிவின் இருத்திறத்தாலும் பெரியோர் தன்மையை அடைவர் அந்நிலையில் அவர் சிறந்தவர் என்பதை ஆசிரியர் புலப்படுத்துகிறார்.

போர்க்களத்தில் புறமுதுகிட்டு ஓடுகின்ற வீரனை இம்சித்தல் அழகாகாது என்று வற்புறுத்திப் பேசாத சங்க இலக்கியம் ஒன்றேனுமில்லை. அந்நெறியிலே இந்நூலும் சிறந்த வீரனின் பண்பையும் அமைவுற எடுத்துக் கூறுகின்றது.

"உடையிட்டார் புன்மேய்ந்தார் ஓடிநீர்ப் புக்கார்
படையிட்டார் பற்றேது மின்றி நடையிட்டார்
இவ்வகை ஐவரையும் என்றும் பொருவரே
செவ்வகைச் சேவகர் செய்து"

செவ்விய தன்மையையுடைய வீரர், வீரர் என்னும் பெயருக்குரிய வாழ்வு நடத்துகின்றவர், தமக்கஞ்சிய எதிரிகளிடத்தே ஆடையைக் களைந்து விட்டவர்களிடத்தும், புல்லைக் கௌவியவர்களிடத்தும், நீரில் புகுந்து மறைந்தவர்களிடத்தும், ஆயுதத்தைக் கீழே வைத்தவர்களிடத்தும் அவர்களை வருத்தும்பொருட்டு நெருங்கமாட்டார்கள். போரில் ஈடுபட்டவர் ஆடையைக் கீழே போடுதல், புல்லைக் கௌவுதல், நீரில் புகுந்து மறைதல், ஆயுதத்தைக் கீழே வைத்தல், ஓடுதல் ஆகிய இன்னவை தோல்விக்குறிகளாம். ஆதலின் இவரைப் பின் தொடர்தல்

உண்மை வீரர்க்குரியதாகாது என்று கருதி இவரை அணுகவேமாட்டார்கள் அந்நாளையவீரர்கள்.

இவ்வாசிரியர் அரசர், அமைச்சர் ஆசிரியர் மாருக்கர் இவர் தம் இயல்புகளை தெள்ளிதின் உரைக்கின்றார். அவை யாதடுதெனக் காண்போம். அரசன் இயல்பினையும் அமைச்சன் இயல்பினையும் ஒரே செய்யுளில் தெரிவிப்பர்.

“தன்னிலையும் தாழாத்தொழிலிநிலையும் துப்பெதிர்ந்தார்
இன்னிலையும் ஈடிலியல் நிலையுந்—துன்னி
அளந்தறியும் அரசன் அமைச்சன் யாதும்
பிளந்தறியும் பேராற்றலான்”

அரசன் தன்நிலையும், தாழாத்தொழில் நிலையும் இன்னிலையும் ஈடுஇல்நிலையும் துன்னி அளந்து அறிந்து செய்வான் என்று வினைமுடிவு செய்தல் வேண்டும். இதன் பொருள் அரசன் என்போன் போர் முதலிய பெரிய அலுவல்களில் ஒன்றைத் தொடங்கும்போது தன்னுடைய நிலைமையினையும் தான் தொடங்கி ஈடுபடுகின்ற அலுவலின் குறைவுபடாத நிலைமையினையும் மனத்தால் ஆராய்ந்து அளவிட்டு அறிந்து அதன் பின்னர் அலுவலைத் துறைபோகச் செய்பவனாவன். அமைச்சன் யாவும் பிளந்தறியும் பேராற்றலான். அமைச்சனுக்கு அம்சமான பண்பு எப்பொருளையும் பகுத்தறியும் பண்பு.

இந்நூலாசிரியர் ஆசிரியரைப்பற்றி “ஆறைக்கம் வேண்டாதன் ஆசான்” என்று கூறுவர். துறவியேயன்றி, இல்லறத்தானும் ஆசிரியனாய வழி. ஆண்மகனுக்குரிய வீரம், படாடோபம் முதலிய குணங்களை

அடக்கியவனும் இரக்கம் தண்ணளிபோன்ற மென்மைக் குணமுடையவனு யிருத்தல் வேண்டும். இப்பெற்றி யுடையானே ஆசிரியனுவான். மாணவன் கற்ற கல்வி யின் பயன் காமம், வெகுளி மயக்கம் ஆகிய குற்றங் களையும் கடிதலே என்பர். அகத்தூய்மையையே அந் நாளைய கல்வி நாடுகின்ற தன்மை அறிந்தின்புறத் தக்கது மேலும் ஆசிரியனை வலம் வந்து வழிபாடு செய்தலும் இன்றி யமையாததாகக் கொள்ளப்பட் டது. வழிபாட்டின் பின்னர் மாணவர் கற்பர்; கேள்வி ஞானம் பெறுவர். இது "நுணங்கு நூலோதுதல் கேட் டல் மாணுக்கர் வணங்கி வலங்கொண்டு வந்து' என்ப தால் அறியலாம். அந்நாளைய மாணவர் குடுமி வைத் திருந்தார் என்பதும் அவரது குடுமி நெய்தற் பூவை யொத்து விளங்கிற்றென்பதும் "நெய்தல் முகிழ்ந்துணை யாம் குடுமி" என்று மாணுக்கர் பற்றிய பாடலில்வரும் அடிகளால் அறிந்துகொள்ளலாம்.

இந்நூலாசிரியர் சமண சமயத்தவராதலின், தமது சமயச்சார்புடைய கருத்துக்களை ஆங்காங்கே வலியுறுத் திப் பேசுவர். இளமை நிலையாமை, யாக்கை நிலை யாமை, செல்வநிலையாமை போன்ற பல நிலையாமைகளை சமணர்களேயன்றி பிறர் அத்துணை திட்பமாகவும் நுட்பமாகவும் வன்மையாகவும் கூறியிருக்கின்றனரோ என்று ஐயுறவேண்டியு யிருக்கின்றது. சிறு பஞ்ச மூலக் கர்த்தாவும் இளமை நிலையாமையைத் திறம்படக்கூறி இளமையில் துறவினை மேற்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்துகின்றனர்.

"பழு விளமை வாய்த்த வனப்பு வணங்காக்
குடி குல மென்றைந்தும் குறித்து—முடியா
துளங்காநிலை காணார் தொக்கீர் பசுவால்
இளங்கால் துறவாதவர்"

என்று கூறியவிடத்து இளமை நிலையாமை குறித்துத் துறவறம் ஏற்றல் வேண்டுமென்று விதந்தமைப்பதைக் காண்கிறோம். நல்ல உறவையும் இளமை பொருந்திய அழகு குறைவில்லாத உயர் குடிப் பிறப்பு, சிறந்த மரபு ஆகிய இவ்வைந்தையும் எண்ணி இளமைப் பருவத்தில் அறவினை மேற்கொள்ளாதவர் சேர்ந்து பாரச் சுமையை இழுக்கின்ற விலங்கினமாவர். மேற்கூறிய விடிவிளமை முதலியன அனுபவித்து முடியமாட்டார். அவற்றிலே மன நிறைவு ஏற்படாதபடி அவற்றில் தம் விருப்பத்தைச் செலுத்திக் கொண்டே ஆழ்ந்திருப்பர். அதனால் கெடாத முத்தி நிலையையும் அடைய மாட்டார்கள்.

உயிர்க் கொலை கூடாது, உணவின் பொருட்டும் கொலை கூடாது என்பதை வலியுறுத்து முகத்தான் "கொன்றுண்பான் நாச்சாம்" என்றார். ஒரு பிராணியைக் கொலை செய்து அதன் தசையைத் தின்பவனுடைய நாவானது அழியுமென்று சொல்வதைக் காட்டிலும் கர்ண கடூரமானது யாது?

பிள்ளைச் சோறு கொடுத்தல் என்ற வழக்கம் இருந்தும், அவ்வழக்கம் நெடுநாள் வாழக் கருதிக் கடைப் பிடிக்கப் பெற்றதும், இந்நூலிலிருந்து நாம் பழங் காலத்திய வழக்கங்களாக அறிவன. குழந்தைகளுக்குச் சோறளித்தல் அறங்களில் ஒன்றாகக் கருதப்பட்டது. இவ்வறத்தோடு பஞ்ச காலத்தில் தன் உணவைப் பகிர்ந்துண்ணல், தன்னிடத்திலுள்ள பொருட்களைப் பிறருக்கு வழங்கல், அஞ்சாமல் எதிர்ப் படையிலுள்ளே சென்று அவரை நிலை கலங்கச் செய்து தம் படையைக் காத்தல் ஆகிய இவ்வறங்களையும் மேற்கொள்பவன் என்றும் வயதிற்குமேலிருந்து வாழ்வான் என்கின்றார்.

"பஞ்சப்பொழுது பாத்துண்பான் காவாதான் [தே
அஞ்சா துடை உடைபடையுட் போங்தெறிவான்-எஞ்சா
உண்பது முன்வான் குழவி பலி கொடுப்பான்
எண்பதின் மேலும் வாழ்வான்"

என்பது புலவர் வாக்கு.

நல் வாழ்க்கைக்கு இன்றியமையாத பல அரிய பொருட்களைத் தன்னகத்தே கொண்டதும், பழங்கால மரபுகள் பழக்க வழக்கங்கள் இவைகளைக் காண்பிப்பதும், நீதிக் களஞ்சியமாய் விளங்குவதுமான சிறு பஞ்ச மூலம் அளவிற் சிறியதோர் நூலேயாமென்றாலும் நெஞ்சை அள்ளும் அருமைப்பாட்டில் பெரிதாம்.



# நாஞ்சில் நாடு.

நாஞ்சில் நாடு என்பது பழங்காலத்திலிருந்தே பெய ராலும் புகழாலும் சிறந்தது; கேரளம் என்ற மலையா ளத்தின் நிலப்பரப்பில் விளங்குவது; தற்காலத்தில் திரு விதாங்கூரின் ஒரு பகுதியாக இருப்பது. இது தோவாளை, அகஸ்தீஸ்வரம் என்னும் இரு தாலுகாக்களால் ஆன தொன்மை வாய்ந்த நாடு.

இந்நாட்டின், புலவர் புகழுரைக்குரிய பெட்டமர் பருவதம் நாஞ்சில் என்ற பெயரையே கொண்டு நிகழ் கின்றது. அது இந்நாட்டின் தலைமை நிலைமையிலிருந்து இந்நாட்டை வளம் படுத்தும் வானூற்றாக விளங்கு கின்றது.

தமிழ் மொழி வல்லார் வகுத்த மருதம் முல்லை குறிஞ்சி நெய்தல் என்ற நிலப்பகுப்புகளின் சிறப்பியல்பு கள் எத்துணையும் குறையாத நிலையில் இயற்கையன்னை யின் சிறப்பான அருள் பெற்றது நாஞ்சில் நாடு. வள மிக்க வயல்களின் வனப்பு ஒருபாலும், கதிரவன் ஒளி புகா காடுகளின் வனப்பு இன்னொருபாலும், உயர்ந் தோங்கு குன்றுகளின் எழில் பிறிதொருபாலும், நீலத் திரைக்கடல் ஓரத்தின் நேர்த்தி மற்றொருபாலும் நாஞ் சில் நாட்டை அணி செய்கின்றன. கைபுனைந்தியற்றாக் கவின் பெரு வனப்பின் கலா நிலையமாக இந்நாடு ஒளிர் கின்றது என்றால் அது மிகைப்படக் கூறியதாகாது. இனிய பொழில்கள், நெடிய வயல்கள் எண்ணரும் பெருநாடு, கனியும், கிழங்கும், தானியங்களும் கணக்

கின்றித் தரும் நாடு என்று அமர கவிஞர் பாரதியார் கூறியது இந்நாஞ்சில் நாட்டிற்கே நன்கு பொருந்துவதாகும்.

இதற்கு நாஞ்சில் என்ற பெயர் நாஞ்சில் என்ற பெயருடைய மலைபற்றி வந்ததாகச் சிலர் கூறுவர். நாஞ்சில் என்ற பெயருக்கு அரண் என்ற பொருளும் உண்டு. எனவே, நாஞ்சிலை (அரணை) யுடைய நாடு நாஞ்சில் நாடு என்று காரணங்கூறுவர் வேறு சிலர். நாஞ்சி என்னும் குறவர் கோமானால் ஆளப்பெற்ற கீர்த்திபற்றி நாஞ்சில் நாடு என்று பெயராயிற்று என்று நவில்வாரும் உண்டு. நாஞ்சில் என்பது கலப்பை பற்றி, கலப்பைத் தொழில் மிகுதிபற்றி வந்தது என்று கூறுவதே மிகவும் பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது. நாஞ்சில் நாடெங்கும் நன்செய்யே. நஞ்செய் நிறைந்த நாடு, நஞ்செய் என்ற பெயர் பெறுதல் தகவுடையதே. இன்றளவும் இந்நாட்டில் மிகுதியான நெல் பயிர் செய்யப்படுவதால் திருவிதாங்கூரின் நெற்களஞ்சியம் என்று இது விதந்து பாராட்டப்பெறுகின்ற அளவுக்கு முன்னணியில் உள்ளது.

நாஞ்சில் நாட்டின் நன்செய் வளம்பற்றி செண்பகராமன் பள்ளு என்ற சிறந்த இலக்கியத்தில் மூத்த பள்ளியின் கூற்றாக அமைந்த வருணனை அறிந்து இன்புறத்தக்கது. மூத்த பள்ளி கூறுகின்றாள்.

"வயலெல் லாம்நற வறற் புனல்பாயும்
வரம் பெல்லாமிள வால்வளை மேயும்
அயலெல்லாஞ் செந்நெல் காய்க்குலை சாயும்
அருகெல்லா மிரை அன்னங்கள் சாயும்

புயலெல்லாம் மலர்ப்பூம் பொழில் தோயும்
　பொழிலெல்லாம் கனி போகங்கள் ஈயும்
இயலெல்லாம் தெரி செண்பக ராமநல்
　எந்தல் வாழ்நாஞ்சி நாடெங்கள் நாடே
பாளைப் பூகமாக் தக்காய் செம்
　பவளம் போலப் பழுத்துச் சொரியும்
நாளத் தாமரைச் செம்மலர் நெல்வயல்
　நாரி மார்முகம் போல விரியும்
ஆளப் பாயும் பகட்டின வாளைகட்
　கஞ்சிலே மட வன்னம் இரியும்
வாளுக்கே விமன் செண்பக ராமன்
　வளமைசேர் நாஞ்சி நாடெங்கள் நாடே",

அவனது நாட்டில் வயலுக்கு தேனேறி கருமணல் தோன்ற நீர் பாயும்; சங்குகள் வரப்புகளில் மேய்ந்து கொண்டிருக்கும்; செந்நெல் முதிர்ந்து குலைசாயும். அருகே அன்னப் பறவைகள் இரையை ஆய்ந்துகொண்டிருக்கும். மேகங்கள் தங்கும் சோலைகள் பலவிதக் கனிகளைக் கொடுக்கும். கமுகின் மரகத நிறமுடைய காய்கள் பவளம்போல பழுத்துச்சொரியும், நெல் வயலில் பெண்களது முகம்போல தாமரை மலர் விரியும். நீர் நிரம்பிய வயல்களில் துள்ளிப்பாயும் இளம்வாளை மீன்களைக் கண்டு இரை மேய்ந்துக்கொண்டிருக்கும் அன்னப் பறவைகள் அஞ்சிப் பறந்தோடும். இத்தகு இயற்கை வளம் செழிக்கும் செல்வச் செழுநாடு நாஞ்சில் நாடு.

தொன்மைப் பெருந்தமிழ் கூறும் நல்லுகத்தின் வன்மைக்கினை நாடாகிய நாஞ்சில் நாடு வரலாற்றுப் பழமை மிக்கது. ஏறத்தாழ 2000 ஆண்டுகட்கு முன்பே இந் நாடு தமிழகத்தின் பகுதியாகவே இருந்துளது என்ப

தைத் தொல்காப்பியம் நன்கு வலியுறுத்தும். இப்பகுதியிலுள்ளார் தம்மைத் தமிழரில் தமிழராகவே கொண்டு வாழ்வு நடத்தியவர் ஆவர். நமது நாட்டின் எல்லையை "வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்து" என்ற அளவால் இலக்கியப் பட்டயத்தில் என்றும் அழிவுறுவகை பொறித்து வைத்த பெருந்தகையார் ஆசிரியர் பனம்பாரனார் இப்பகுதியினரே. இவர் கன்னியாகுமரிக்கு அருகிலுள்ள திருவிதாங்கோடு என்ற ஊரினர். மத்திய தமிழகத்துக்கு வெகு சேய்மையில் வதிந்தாலுங்கூட, தமிழ்ப்பெரு நிலத்தின் தெற்குக் கோடியிலே உறைந்தாலுங்கூட இவர் உள்ளத்தில் தமிழ் நாட்டெல்லையைப் பேணும் நற்கருத்து எத்துணை தூரம் உரம்பெற்று நின்றது என்பதை நாம் உன்னுதல் வேண்டும், ஆசிரியர் பனம்பாரனார் நாஞ்சில்வாழ் மக்களின் தமிழக ஆர்வத்தைப் பிரதிபலித்த ஆடிபோன்றவர் ஆவர். அம் மக்கள் தாம் தமிழகத்தினரே என்ற உறுதிப்பாடுடையவர்கள் என்பதற்கு ஆசிரியர் பனம்பாரனாரின் இவ்வாசகம் ஒன்றே போதிய சான்றுமென்க.

நாஞ்சில் நாடு ஆதியில் பாண்டியனுக்குரியதாக இருந்தது. பாண்டிய மன்னனுக்கு குமரிச் சேர்ப்பன் என்ற பெயர் திவாகரத்தில் காணப்படுவதானது பாண்டியருக்கு நாஞ்சி மீது உள்ள தலைமை உரிமையை நிலைநிறுத்தும். அன்றியும் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் போற்றும் புலவர் காரிகிழார். "தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்" பாண்டியனது புகழும், அவனைப் பற்றிய அச்சமும் பரவவேண்டுமென விழைகிறார். ஆதலின், குமரி நாடாம் நாஞ்சில் நாடு ஏற்கனவே பாண்டியனுக்கு உள்ளடக்கம் ஆனது பெறப்

படும். பாண்டியர் வாழையடி வாழையாய் உரிமை யோடு தலைமை பூண்டு ஆண்ட நாஞ்சில் நாடு அவ்வப் போது சேர அரசர்களால் அபகரிக்கப் பெற்றது என்ப தற்கு சங்க இலக்கிய ஆதாரங்கள் இல்லாமலில்லை. ஏறத் தாழ 300 ஆண்டுகள் சேரவரசர் கையிலிருந்த நாஞ்சில் நாடு நெடுமாறர் என்ற பாண்டியன் காலத்து மீட்கப் பெற்றது. இவன் கோட்டாற்றிலும், கடல் அடுத்த விழிஞத்திலும் சேரரோடு பொருத செய்தி பாண்டிக் கோவையால் அறியப் பெறும். மீட்கப்பெற்ற நாஞ்சில் இயற்கையாய் அமைந்த மலைத்தொடர் அரணாக அமைய சேரருக்கே சேருவதாயிற்று. 10-13ம் நூற்றாண்டுகளில் தென்னாட்டு அரசரில் சோழர் தலைமை பூண்ட காலத் தில் இந்நாடு அவரது கைக்கு மாறியது. சோழ அரசர் சாசனங்கள் இன்னும் நாஞ்சில் நாட்டின் பலபாகங்களில் காணுதற்குத் தக்க நிலையில் உள்ளது. சோழர்கள் காலத்தில் நாஞ்சில் நாடு நகரங்கள் சிலவற்றிற்குப் புதிய பெயர்கள் அமைக்கப் பெற்றன. கோட்டாற்றிற்கு மும்முடிச் சோழபுரம் என்றும், சோழ கேரளபுரம் என் றும் புதிய பெயர்கள் ஏற்படலாயின. சோழ அரசர் வலிகுன்றி ஒழிய சேரவரசரே இதனைக் கைப்பற்றி ஆளும் வாய்ப்பினைப் பெற்றனர். இன்றளவும் இத் தமிழ்ப் பழங்குடி மக்கள் வாழும் நாஞ்சில் நாடு கேரள ஆட்சியில் அடங்கியதாக இருந்து வருகின்றது.

பாண்டிய, சோழ, சேர அரசர்கள் ஒருவரை ஒரு வர் பொருது நாஞ்சில் நாட்டைக் கைப்பற்றி ஆண்டனர் என்பதும், அப்படி ஒருவர் ஆளப்பொருத பிறர் மீண்டும் போர்க் கெழுதலைத் தொழிலாகக் கொண்டிருந்தனர் என்பதும் சரித்திரம் கூறும் செய்தி. இப்போர்ச் செய்தி யைக் காட்டிலும் இன்னொரு வியத்தகு செய்திக்கு நாஞ்

சில் நாட்டு ஓரூர் இடந்தருகின்றது. அவ்வூர் யாதெனில், அது இதுகாறும் நிலைபெற்றுள்ள முப்பந்தர் என்பதாம். முப்பந்தர் என்று சொல்லக் கூடியதான அவ்விடத்திலே தற்போது மூன்று பந்தல்களோ, அல்லது, யாதேனும் ஒரு பந்தலோ, அல்லது, அதன் சிதைவோ இல்லை. தமிழ் வேந்தர் மூவரும் தங்கள் நாடுகளுக்கெல்லாம் சில பொதுவான திட்டங்களைப் பற்றி சர்ச்சை செய்யவும், தம்மிடத்தேயுள்ள ஐக்கிய மனப்பான்மையை வளர்த்துக்கொள்ளவும், சிற்சில சமயங்கள் ஒன்று கூடுவர் என்றும், அவர்கள் இவ்வாறு சந்திக்கும் இடமே முப்பந்தர் என்றும் கர்ண பரம்பரையாகக் கேட்கப் படுகின்றது. இது உண்மையாயின் எத்துணை நவமான முறை. இந் நாளில் வல்லரசுகள் கூடுகின்ற தோரணையில் அன்றோ, சமாதானம் விழையும் நாடுகள் சமரச மனப்பான்மையில் சர்வதேசிய முறையில் கூடுகின்ற தோரணையில் அன்றோ அந்நாளில் அரசர்கள் ஒன்று கூடிக் கலந்தாலோசனை செய்திருக்கிறார்கள்?

இந்நாட்டில் பாண்டியர் ஆட்சி வேரூன்றித் தழைத்திருந்தது என்பதற் கறிகுறியாக பாண்டியர்களாலே கட்டப்பட்ட கோயில்கள் இருக்கின்றன. அழகிய பாண்டி புரத்தில் கட்டப்பட்ட கோயில்கள் பாண்டியர்களாலேயே கட்டப் பெற்றன. இன்னும் இங்கே இன்னொரு விசேஷம் உண்டு. அது ஔவையார் கோவில். தமிழ் மூதாட்டிக்கு எடுக்கப் பெற்ற தனிப்பெருமை வாய்ந்த இக்கோவிலில் மகளிர் சேர்ந்து சிறப்புச் செய்தல் மகத்தான கொண்டாட்டமாக இன்றளவும் நடைபெற்று வருகின்றது.

நாஞ்சில் நாட்டுத் திருப்பதிகளுள் சுசீந்திரம் என்னும் திருப்பதி பிரசித்தி பெற்றது. இப்புண்ணிய தலத்தில் பொருந்தியுள்ள திருக்கோவில், தெப்பக்குளம் முதலியவை திருவிதாங்கூரிலேயே வேறு இடங்களில் அமையாத அத்தகைய வனப்புடையன. இவற்றிலிருந்து சோழர்கள் சிற்பத்தின் உயர்வைத் தெரிந்து கொள்ளலாம்.

நாஞ்சில் நாடு நன்செய்க்குப் பெயர் பெற்றிருப்பது போல, ஏனைய விளைவுகளுக்கும் சிறந்த நிலையமாக விளங்குகின்றது. வாழை, பலா, மா என்ற முக்கனிகள் மூலைக்கு மூலை காணப்படும் நாடு நாஞ்சில் நாடு. அணுசக்திக்குப் பெரிதும் வேண்டப்படுவதாகிய தோரியம் கிடைப்பது நாஞ்சில் நாட்டு மணவாளக் குறிச்சியிலேயே. உள்நாட்டில் வளமலிந்த வளநிலங்கள் இருப்பன போன்று கடற்கரையை அடுத்து ஏராளமாக உப்பளங்கள் உள. மருத்துவாமலை (மருந்துவாழ் மலை) என்று பெயர் பெற்றுள்ள குன்றத்தில் வித விதமான பச்சிலைகள், மூலிகைகள் கிடைக்கப் பெறுகின்றன. அனுமான் கொணர்ந்த சஞ்சீவி மலையின் ஒரு சிறுபாகமே இது என்ற ஐதீகத்தின் தன்மை எஃதுவாயினும் இம்மலையிடத்தே பிற இடங்களில் கிடைத்தற்கரிய மூலிகைகளும், பச்சிலைகளும், பிற மருந்துப் பொருள்களும் கிடைக்கின்றன என்பது மட்டும் மறுக்க வியலாத உண்மை.

நாஞ்சில் நாடு தமிழ் மணங்கமழும் தமிழர் நாடு. இங்கே 8 லட்சம் தமிழ் மக்கள் வாழ்கின்றார்கள். இம்மக்கள் நிறைந்த தமிழ்ப் பற்றுடையவர்கள். கொச்சை மொழி கலவாத் தூய தென் தமிழ்ச் சொற்களையே

இவர்களுடைய பேச்சு வழக்கிலும் கையாளுகின்றனர். தமிழைப் பாதுகாக்க வேண்டும் என்ற சூழ்நிலைபற்றிய உணர்வோடு கூடியவர்கள் ஆதலால் அவர்கள் வாழும் பகுதியில் தமிழ் நன்கு வளர்வதற்கு இடம் ஏற்பட்டுள்ளது. இன்று நாஞ்சில் நாடு பாவலர்கள், புலவர்கள் நிறைந்த இலக்கியப் பண்ணையாக விளங்குகின்றது. சதாவதானி செய்குதம்பிப் பாவலரவர்கள், கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை ஆராய்ச்சியாளர் கே. என். சிவராஜபிள்ளை ஆகிய இவர்கள் நாஞ்சில் நாடு தந்த நற்பெரும் புலவர்கள் ஆவர். இவர்கள் தமிழ் இலக்கிய வளர்ச்சித்துறையில் வழங்கும் பங்கு பாராட்டத் தக்கது.

இந்நாட்டிலுள்ள ஊர்களின், ஆறுகளின் பெயர்கள் அழகான செந்தமிழ்ப் பெயர்கள். நல்லூர், தேரூர், மறவன் குடியிருப்பு, சூரன்குடி, ஈத்தான் மொழி, நிட்டுவிளை, ஆல்வாய் மொழி என்பன அவற்றுள் சில. பழைய ஆறு, பஃறுளி ஆறு என்பன ஆறுகளிற் சில. பஃறுளியாறு குமரிக்குத் தெற்கே கொடுங்கடலால் கொள்ளப்பட்ட நிலப்பரப்பில் நிவர்ந்த பண்டைக்கால ஆற்றினை நினைவுபடுத்த உளதாகிய ஆறு எனக்கொள்ள வேண்டும். நாஞ்சில் நாட்டு மக்கள் தாள்கோல், அல்லது திறவுகோல் என்பார்களே தவிர சாவி என்று சொல்லார். பகடி பண்ணுதல் என்பாரே தவிர கேலி பண்ணுதல் பரிகாசம் பண்ணுதல் என்ற வழக்குகள் அவர்கள் பேச்சில் இல்லை. திருக்குறள் ஆராய்ச்சியும், கம்பன் கவிநய ஆராய்ச்சியும் நாஞ்சில் நாட்டின் ஊர்கள் தோறும், கிராமங்கள் தோறும் நடைபெறும். தொன்மைவாய்ந்த இலக்கியக் கருவூலங்களைக் கருத்துடன் பேணுகின்ற காரணத்தால், இன்றும் தமிழ் உணர்ச்சி குன்றாதவர்களாக இருக்கிறார்கள் நாஞ்சில் மக்கள்.



## பொருநை

பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை, எனும் திருநதி பாண்டி நாட்டைப் பண்படுத்திப் பொலிவுறச் செய்யும் நன்னதி. குன்றாத நீர் வளத்தால் அதன் இரு மருங்கும் செழித்தோங்கி விளங்கும் சோலைகள் காட்சி இன்பம் பயப்பன. அப் பூம்பொழில்களகத்தே திரிந்துலவும் மடக்கிளிகளின் மழலை மொழியும் கண்ணுக்கினிய பறவைகளின் பண்ணூர்ந்த பாட்டொலியும் செவிக்கின்பந்தருவன. அகத்திய முனிவரின் உறைவிடமெனக் கருதப்படும் பொதிய மலையில் தோன்றி மேகம் தவழும் மலைச்சாரலிடை வழிந்தோடி மெய்த்துறவிகளின் உள்ளம் போல கள்ளங்களங்கமற்றத் தெள்ளிதாய்ச் செல்லும் பொருநை கண்ணுக்கும் செவிக்கும் கருத்திற்கும் விருந்தளிப்பதாகும்.

ஒரு நாட்டின் கலைவளர்ச்சியும் நாகரிக உயர்வும் அந்நாட்டிலேயுள்ள ஆற்றோரத்தில் அமைவனவாகக் கொள்ள வேண்டும். இயற்கை வளம் கொழித்து இன்ப வாழ்க்கைக்கு வேண்டிய நல்வசதிகள் நிரம்பியுள்ளதாதலின் நதிதீரமே நாட்டிலுள்ள மக்களிற் பெரும்பாலரால் நாடப்பெறுகின்றது. நாட்டின் வரலாற்றை உருவாக்கும் இயற்கைப் பொருட்களிலே நதி தலையாயதொன்று என்பது வரலாறு காட்டும் உண்மை. மக்களின் நாகரிக முதிர்ச்சிக்கும் பண்பாட்டின் பக்குவத்திற்கும் தாயகமாய்த் திகழ்வது நதியாகவே ஒரு இனத்தவரின் நாகரிகத்தை அவர்தம் நாட்டின் பெயரால் வழங்காது அந் நாட்டிலேயுள்ள சிறந்த ஆற்றின் பெயரால் வழங்கும் வழக்கின் பெற்றி ஊன்றி உணரத்தகுந்தது. நைல்

நதி நாகரிகமெனவும், சிந்து நதி நாகரிக மெனவும், வைகையாற்று நாகரிகமெனவும் பேசப்படுதல் காண்க

தமிழ்நாட்டின் சரித்திரம் உருவாவதற்கு உறுதுணை செய்த ஆறுகளில் இலக்கியப் பிரதானமும், சரித்திர முக்கியத்துவமும் பெற்றவை காவிரி, வைகை, பொருநை ஆகிய இம்மூன்றே, "அழகு நிறைந்த தமிழ் நாடு" என்னும் பழந்தமிழ்நாட்டை அழகு படுத்தி ஆக்கஞ் செய்வன ஆறுகள் என்க.

இவற்றுள் பொருநையாறு சரித்திரப் பழமை வாய்ந்தது தாம்பிரபரணி என்பது இதற்குரிய வேறு பெயர். உலக வழக்கில் தாம்பிரபரணி என்ற பெயரே நிலைபெற்றுளது. இன்றைக்கு பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு மகதநாட்டிலிருந்து இலங்கைத்தீவில் குடியேறிய மக்கள் தாம் குடியேறிய பிரதேசத்தை தாம்பிரபரணி என்று அழைத்தனர் என்றும் பின்னர் இலங்கைத் தீவையே தாம்பிரபரணி என்று கூறத் தலைப்பட்டார்கள் என்றும் இவ்வாறு அவர்கள் கூறியதற்கு, அவர்கள் இலங்கையில் குடியேறுவதற்கு முன்பு தென்பாண்டி நாட்டிலே சிலகாலம் வதிந்ததே காரணமாயிருத்தல் கூடும் என்றும், திருநெல்வேலியின் பிரபல நதியின் பெயரும் தாம்பிரபரணி என்றிருந்தமையால் இவ்வாறு தாம் குடியேறிய பகுதிக்கும் இப்பெயர் இட்டிருத்தல் பொருத்தமுடைய தென்றும் கால்டுவெல் ஐயர் "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" என்ற நூலில் கூறியிருக்கின்றனர்.

தாம்பிரபரணி என்பது சரித்திரப் பழமையுடைய பெயர் என்றாலும், உலக வழக்கிலே இன்றும் நிலைபெற்றுள்ள பெயர் என்றாலும் இலக்கியத்திலே பொருநை

நதியென்றே பெருவழக்காய் வழங்குகின்றமை நாம் பரக்கக் காணலாம்.

பண்டை நாளில் பொருநையாறு கடலொடு கலக்கு மிடத்தில் வீறுடன் விளங்கியது கொற்கை என்னும் பெருந்துறையாகும். இச் செல்வச் செழுந்துறையே பாண்டிய நாட்டின் தலைநகராய் விளங்கிற்று. கொற்கைத் துறையைத் தன்னகத்தே கொண்ட வளை கடல் கொற்கைக் குடாக்கடல் என்ற நந்தமிழ் நாட்டோடு பண்டுதொட்டு வணிகத் தொடர்புடைய யவன மக்களால் குறிக்கப்படுகின்றதென்றால் கொற்கை எத்துணைச் சீருஞ் சிறப்புடையதாயிருக்கிறது என்பது சொல்லாமலே அமையும்.

பாண்டிய நாட்டின் தலைநகரமாகவும் சிறந்த துறைமுகப்பட்டினமாகவும் உரோம அரசன் அகஸ்தனது தூதுவர்களை வரவேற்கும் பேறுபெற்றதாகவும் வேற்று நாட்டு வணிகர்களது வியாபாரத் தொடர்பால் வளமடைந்ததாகவும் விளங்கிய கொற்கை பொருநையாற்றின் போக்கு மாற்றம் ஒன்றே காரணமாகத் தன் பெருமையும் உயர் நிலையும் குன்றுவதாயிற்று. இயற்கையும் இயற்கையின் விளையாட்டால் பொருநையின் மண்ணும் மணலும் கொற்கைத் துறைமுகத்தைப் படிப்படியாய்த் தூர்த்துக் கருங்கடலை அத்துறையினின்றும் புறம் போகச் செய்தது எனவே கொற்கை தன் தலைமை நிலையை இழந்தது. 1292-ம் ஆண்டில் மார்க்கபோலோ இந்நாட்டிற்கு வந்த காலத்து அவன் கருத்தை ஈர்த்தது கொற்கையல்ல காயல் துறையே ஆகும்.

நகரங்களை யுண்டுபண்ணி வளம்பெறச் செய்வதற்கும் வளமார்ந்த நகரங்களை அழித்து அதன் பெருமை

யைச் செய்வதற்கும் பொருநை நதி காரணமாய் அமைந்ததைச் சரித்திரத்திலிருந்து அறிந்து கொள்கிறோம்.

சரித்திரத்தையே மாற்றும் ஆற்றல் படைத்த பொருநையோடுகின்ற பொலிவுடைய பிரதேசத்தில் சரித்திரத்தில் மாறாத புகழோடு விளங்கும் பெரும் புலவர்கள் தோன்றியுள்ளார்கள்; உறைந்துள்ளார்கள். பொதிய மலையில் வீற்றிருந்து முத்தமிழ் வளர்த்த முனிவர் பெருந்தகையின் வரவைப்பற்றிய வரலாறு எவ்வாறிருப்பினும் அவர் உறைந்த விசேடத்தால் பொருநை நாட்டிற்குரிய புலவரே என்பது தேற்றம். பொருநையின் கரையில் அமைந்த சிறப்பான ஊர்களிலே ஆழ்வார் திரு நகரி என்பதும் ஒன்று. கருவிலே திருவுடையராய் கவிபாட வல்ல நல்வித்தை கைவரப் பெற்றவராய்க் கனிந்த பாக்கள் பாடிய நம்மாழ்வார் இத்திரு நகரிக்குரியவரே. ஆண்டவனது அருள் திறத்தைப் பாடும் பணியே தன் வாழ்க்கையின் பெரும் பணியெனக்கொண்டு தீஞ்சுவைப் பாடல்களால் பரமனைப் போற்றிய குமரகுருபர சுவாமிகள் பிறந்தது பொருநை நதிக் கரையோரத்திலுள்ள ஸ்ரீவைகுண்டம் என்ற திருப்பதியாகும். பொருநைக் கரையிலுள்ள அம்பா சமுத்திரத்தின் அருகிலே விக்கிரமசிங்கபுரத்தில் தமிழ் தழைக்கத் தழைத்த சிவஞான முனிவர் தோன்றினர். மேலைநாட்டிலிருந்து இந்நாட்டிற்கெழுந்து அருட்சமயப் பணியோடு அருந் தமிழ்த் தொண்டு செய்த ராபர்ட் தெ நொபிலி கான்ஸ்டன்டைன் பெஸ்கி, கால்டுவேலர், ஜி. யு. போப் முதலானோரைப் பொருநை நாட்டிற்குரியவராகவே நாம் போற்றுகின்றோம்.

புலவர் பலரைப் பயந்ததும் புலவர் பலர் உறைவ தற்கு இடமாயதுமான பொருநை நாடும் அந்நாட்டிற்கு உயிராய் மதிக்கத்தக்க பொருநை நதியும் புலவர் பாடும் புகழ் பெற்றன. குமர குருபரர், பகழிக்கூத்தர், அழ கிய சொக்கநாதப்பிள்ளை, முக்கூடற் பள்ளுடையார் ஆகிய இன்னோர் பொருநையின் புதல்வர் என்று புகழு ரைக்கும் பொருத்த முடையராய்ப் பொருநையின் சிறப்பை வியந்து போற்றிய வித்தகராவர்.

குமரகுருபரர் பொருநை நதி ஆகாய கங்கையைக் காட்டிலும் சிறந்த நதி என்று குறிப்பிடுகின்றார்.

"குமரி பொன்னியை பொருநை நன்னதிகள்
குதிகொள் விண்ணதியின் மிக்குக்கு லாவவும்"

என்பது அவர்தம் வாக்கு. தடாதகைப் பிராட்டியா ராக அவதரித்த அம்மையின் ஆட்சி காரணமாக அவள் ஆட்சிக்குட்பட்ட பொருநை கங்கையினும் உயர்வு பெற் றது என்பது கருத்து.

சிவபெருமான் கங்கையைத் தன் தலையில் கொண்டி ருந்தும் நனையாதவனாகி பொருநையிலே படிந்து நனை கின்றான் என்பதைக் கூறவந்தவர் பொருநையின் நறு மணங்கமழ் தன்மை, குளிர்ந்தத் தன்மை ஆகிய இவற்றை உணரவைக்கின்ற நிலையில்,

"விண்ணாறு தலைமடுப்ப நனையா நீ விரைப் பொருநைத்
தண்ணாறு குடைந்து வையத் தண்டுறையும் படிந்தனையே"

என்பர்.

மேலும் இப்புலவர் மீனாட்சியம்மை தனது நுண் ணிய நுசுப் பொடிய மூத்தாடுதற்குப் பயன்படும் மூத்

துக்கள் இன்னின்ன இடத்தினின்று கிடைப்பன என்று தெரிவிக்கும் முகத்தான் பொருநை முத்தின் சிறப்பைப் பொருந்தக் காட்டுகின்றார்.

"கோடுங் குவடும் பொரு தரங்கக்
குமரித் துறையிற் படுமுத்தும்
கொற்கைத் துறையிற் றுறைவாணர்
குளிக்குஞ் சலாபக் குளிர் முத்தும்
ஆடும் பெருந் தண்டுறைப் பொருநை
ஆற்றிற் படு தெண் ணிலா முத்தும்"

என்று கூறுகின்றதில் பொருநைப் பகுதியில் அமைந்த கொற்கைத் துறையிலே நெய்தல் நிலத்தோர் குளித்தெடுக்கும் கூட்டமான முத்துக்களினுடையவும் நீராடுதற்குரிய பெரிய குளிர்ந்த துறைகளோடு விளங்கும் பொருநையாற்றிலே கிடைக்கப்பெறும் தெளிந்த நிலவு போன்ற வெண் முத்துக்களினுடையவும் தனித்த பெருமையும் உயர்வுந் தோன்றச் சொல்வது புனைந்துரையன்று, உண்மையோடு பொருந்தும் உரையாம்.

பாண்டியமன்னர் பொருநை மன்னர் என்று அழைக்கப்பட்ட வழக்காற்றிற்கு மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் ஆதாரமுண்டு. மீனாட்சியம்மையைப் புதுநீராடி யருள வேண்டும் என்னும் புலவர் "பொருநைத் துறைவன் பொற்பாவாய் புதுநீராடி யருளுகவே" என்கிறார்.

பகழிக்கூத்தர் திருச்செந்தூர் பிள்ளைத் தமிழிலே முருகப் பெருமானை பொருநையில் நீராட வேண்டுமென்று கூறுகின்ற விடத்து அந்நதியின் வளத்தையும், பெருமையையும் போற்றுகின்றார். "பொய்யா வளமை

தரும் பெருமைப் பொருநைத் துறை” என்பது அவர் தம் புகழுரை. வான் பொய்ப்பினும் தான் பொய்யா வளமுடையது பொருநை. செயற்கரிய செய்யவல்ல முனிவரும் புலவரும் தன் கரையிலுள்ள திருப்பணி களிலே தோன்றும்படியான பெருமை பெற்றது பொருநை. இன்னும் புலவர்.

> “கொற்றவிழ் கடம்பாரல் மலயமால் வரை
> நெடுங் குடுமியில் வளர்ந்த தெய்வக் கொழுந்
> தென்றலங்கன் றுமரகதப் பசுநிறங்கொண்டு
> விளையும் பருவரைச் சந்தன நெடுந்தரு மலர்ப்
> பொழும் பருதியற்றன் பொருநை பாயவிளை
> சாலி நெற் குலமும்”

என்று பொருநை மா நதியையும் அந்நதி பாய்வதால் உண்டாகும் விளைவையும் செஞ்சொற் பாடலால் நெஞ் சார ஏத்துவர். இதன் பொருள் தேன் சொரிகின்றதற் கிடமான விசாலமான பக்க மலைகளுடைய பொதிய மலையின் நெடிய கொடுமுடியில் உலாவுகின்றதான தெய் வத்தன்மை பொருந்திய செழுமையான, இளந்தென்றற் காற்றும், பொன்னிறம் பொருந்தியதும் பசுமை கொண்டு விளைவதுமான சந்தன மரத்திலுள்ள மலர்க் கொத்தும், பொருந்தியுள்ள பொருநை நதியும் அந்நதி பாய்வதால் விளைகின்ற கதிர் நெல்லும் என்பதாம்.

அழகிய சொக்கநாத பிள்ளை பொருநைக்கும் சந்திர னுக்கும் சிலேடைப்பொருள் பொருந்தப் பாடியுள்ள பாடல் அறிந்து இன்புறத்தக்கது. அவர் இயற்றிய பாடல்

"மீனைப் பொருந்திடலான் மிக்ககலை தோய்ந்திடலான்
தானக்க மண்டலமே சார்ந்திடலான்—மானத்தால்
அம்புவிக்கோர் ஆபரணமான முத்துசாமி மன்ன
செம்புந்தி நேர் சந்திரன்"

இதன் பொருள்: மானமுடைமை காரணமாக இந்த அழகிய உலகிற்கே ஒரு அணிகலனான முத்துசுவாமி என்ற பெரியோனே கேள். பொருநை நதி யிடத்தே மீன்கள் வாழ்வதினாலே, மிகுதியான ஆடைகள் தோய்க்கப் பெறுவதினாலே, தான் விரும்புகின்ற மண் தலத்திலே சார்ந்தோடுவதினாலே அந்நதி சந்திரனுக்குச் சமமானது. தானக்க மண்டலம் என்ற தொடர் தாம்பிரபரணிக்கு ஏற்றிச் சொல்லப்பெறும் போது தான் நக்க மண்தலம் என்று விரிந்து தான் விரும்புகின்ற மண் நிலம் என்று பொருள்படும். மேற்குறிப்பிட்ட அடைகளை சந்திரனுக்கு ஏற்றிச் சொல்லும்போது, மீனைப் பொருந்திடலால் என்பது நட்சத்திரங்களோடு பொருந்தி யிருத்தலால் என்றும் மிக்க கலை தோய்ந்திடலால் என்பது, மிகுதியான ஒளி விளங்குவதால் என்றும் தான் நக்க மண்டலம் சார்ந்திடலான் என்பது தான் விரும்புகின்ற கோள் தொகுதியைப் பொருந்தி யிருத்தலால் என்றும் பொருள் பெறும். செம்புந்தி என்ற சொற்றொடர் செம்பாகிய உலோகத்தைக் கரைகளில் கொளிக்கின்ற பொருநைக்குக் காரணப் பெயராய் அமைந்தது.

பொருநையிலே மீன்கள் நிறைந்துள்ள செய்தி முக்கூடற்பள்ளு என்ற நூலிலே நன்கு கூறப்பெற்றுள்ளது. பொருநையாறு பெடுக்கெடுத்து ஓடுகின்ற தன்மையைப் புலவர் கூறுகின்றார். அது வருமாறு:

"உழைத்து விசை கொண்டு எதிர்ந்து கடலின்
உதரங் கீறி யதிரும்நீர்
உதய வரைக்கும் பொதிகை வரைக்கும்
ஒத்துப்போம்படி முற்றும் போய்
பதைத்து வெளியும் திகைக்க முக்கண்
பண்ணைச் சாலை எல்லையாய் நீள்
பசலி திருக்கை சுழி நெருக்கி
பண்ணைக் கும்பமும் பாசி நீள்
வதைக்கும் மகரம் குதிக்கும் சன்ன
மத்தி யுல்லம் பொத்தி நீள்
மடந்தை கடந்தை சம்பான் கொறுக்கு
மலங்கு பசலை கருங்கண்ணி
புதைத்து மணலில் ஒதுக்கிக் கடலில்
போக்கி அழகர் கருணைபோல்
பொருநையாறு பெருகி வரப்
புதுமை பாரும் பள்ளீரே!"

ஆற்றிலே உதைத்து விசையோடு பொங்கி எழுகின்ற நீர் கடலொடு கலக்குமிடத்தில் அதன் வயிற்றைக் கீறி, அதிர்ந்து எழுவதனால் சேய்மையில் இருப்பனவான உதய மலையையும் பொதிய மலையையும் ஒத்து முட்டுகின்றதென்றால் ஆற்றில் எழுந்த பிரவாகம் கடலைத் தாக்கும் வேகம் எத்துணை என்று ஒருவாறு ஊகித்தறியப்படும். பொருநையின் பிரவாகத்திற்கு உபமானமாக ஆண்டவனது கருணைப் பிரவாகம் எடுத்தாளப்பட்டது நினைந்து மகிழ்ந்து பாராட்டத்தக்க தொன்றாம்.



மாதவையா அவர்கள் நம் இலக்கியம் நவமான முறையில் நலம் பெற்று வளர அருந்துணை புரிந்தவர். அதற்காக அயராது உழைத்தவர். கலையெல்லாம் அநுபவத்தின் மொழி பெயர்ப்பு என்பதை நன்கு அறிந்தவர். அதனைச் செயலிலும் காட்டியவர். இலக்கிய நூல் பல எழுதியவர். அது மாத்திரமன்று. நடையைக் காட்டிலும் கருத்து முக்கியம் என்று நம்பியவர். நடையைக் காட்டிலும் கதையின் இலட்சியமே பெரிதென்று நம்பிய வர். இதனால் இவருடைய சொல்நடை பொலிவு இழக்க வில்லை. கதையின் கட்டுக்கோப்பு தளர்வில்லை. செம்மை யான, எளிதான, இன்பத்தமிழிலே சிறந்த உயர்ந்த கருத் துக்களை வழங்கிய முறையில் தற்காலத் தமிழ் இலக்கி யத்திற்குப் புது வழி வகுத்தவர் என்று கூறுதல் இவருக் குப் பொருந்துவதாகும்.

இவர் இளமையில் கற்பன கற்றுக் கேட்பன கேட் டுத் தெளிந்தார். ஆங்கிலமும் அருந்தமிழும் திருந்தப் படித்தார். வடமொழியிலும் நல்ல பயிற்சி. பல்கலைக் கழகக் கல்வியை முடித்த பின்னர் தமிழ் இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபட்டார். திருநெல்வேலிக்கு அண் மையில் உள்ள தச்சநல்லூரில் தமிழ்ப் புலமையும், சிறப் பாகத் திருக்குறள் அறிவுத்திட்பமும் பெற்று விளங்கிய இலக்குமணப்போற்றி அவர்களிடம் நெருங்கிய அன்பு பூண்டு ஒழுகி அவரைத் தம் குருவாகப் போற்றினார் என்று அறிந்தோர் கூறுவர்.

கலைபயில் தெளிவோடு கட்டுரை வன்மை யாகவரப் பெற்ற மாதவையா தமிழ்ப்பணி குறித்துப் 'பஞ்சாமிர்

தம்' என்ற பத்திரிகையை மயிலையிலிருந்து நடத்தி வந்தார். அது இன்றைக்கு ஏறக்குறைய இருபது ஆண்டுகளுக்கு முன்பு நடைபெற்ற இலக்கிய சஞ்சிகை. கவிகள், கட்டுரைகள், சாத்திரக் குறிப்புகள் முதலிய அரிய விஷயங்களோடு மிளிர்ந்த இலக்கியக் களஞ்சியம். இலக்கிய ஆர்வம் முதிராத அந்நாளில் ஒரு இலக்கியப் பத்திரிகையைத் துணிவுடன் தொடங்கித் திறம்பட நடத்திய பெருமை மாதவையா அவர்களுக்கே உரியது.

பாலராமாயணம், சித்தார்த்தன், உதயலன், பாரிஸ்டர் பஞ்சநதம், தக்ஷிண சரித்திரவீரர், பால விநோதக் கதைகள், பொதுதர்ம சங்கீத மஞ்சரி, புதுமாதிரிக் கல்யாணப்பாட்டு, குறள் நானூறு ஆகிய இவைகளே இவரியற்றிய தமிழ் நூற்கள்.

கவி, சிறுகதை, கட்டுரை, தொடர்கதை, நாடகம், சரித்திரம் என்றிவ்வாறுள்ள பல துறையிலும் இவர் நூல் எழுதியுள்ளார். இவர் தம் நூலின் பரப்பிலிருந்து இவரது முத்தமிழறிவும், வித்தகத்திறமையும் நன்கு அறியப்படும். இவரியற்றிய பாட்டுக்கள் நாட்டுப் பற்றினை வளர்ப்பன. ஓதுவார்க்கு உறுதியையும், ஊக்கத்தையும், உவகையையும் அளிப்பன. கட்டுரைகள் இவர் தம் தெளிந்த நோக்கின், அனுபவத்தின் பிறிவுகளாய்த் திகழ்ந்து பயில்வார்க்கு உயர்ந்த அறிவின்பம் பயப்பன. சிறுகதைகள், தொடர்கதைகள், நாடகங்கள், உலகத்தோடு ஒட்ட ஒழுகுந் தகையராய ஆசிரியர் தாம் வாழும் சமுதாயத்தின் நிலையை அவ்வப்போது ஆராய்ந்த முறையில் செம்மையாக இலக்கியச் சுவைபட எழுதப் பெற்றன. படிப்பவர்கள் தம்மையே மறந்து கதைத்தலைவர்களோடு, நாடக மாந்தரோடு

ஒன்றிய உணர்ச்சியை எய்துகின்ற நிலையில் அமைந்தன. சரித்திர நூற்கள் முழுமெய்ச் சரித்திரக் கூற்றுகள் என்று கொள்ளக்கூடியன அன்று. ஆயினும் பொய்யோடு இடைமிடைந்தனவும் அல்ல. சரித்திர உண்மைகளும் அவற்றோடு முரணாத மெய்ப்போக்கான கட்டுரைகளும் விரவியன. நமது முன்னோர்களைப்பற்றி அறிந்து கொள்வதால் சரித்திர உணர்ச்சி நம்மிடம் வளர்தல் வேண்டும். நமது பழைமையைப் பற்றி உண்மையான அறிவு பெருகுதல் வேண்டும் என்ற நற்கருத்துகளோடு எழுதப்பெற்றன.

குறள் நானூறு :-பெறல் அரும் நலம் ஒளிர்கின்ற மணிப்பாக்களாகிய 1330 அருங்குறட் பாக்களிலும் தமிழறி மேதையர்களால் ஆராய்ந்தெடுக்கப் பெற்ற 400 நனி சிறந்த குறட்பாக்களுக்கு ஆசிரியரது கருத்துரை, தெளிவுரை ஆங்கிலப்பொருவுரை ஆகிய இவற்றோடு கூடியது. தமிழ் நூற்புலமைக்கு எல்லை எனக் கொண்டாடப் பெறும் திருக்குறளில் பயிற்சி மிக்குடையவரான இவ்வாசிரியரது உரை நடை திட்பமும், நுட்பமும் வாய்ந்து விளங்குவதில் வியப்பொன்றுமில்லை.

சித்தார்த்தன் :—இந்நூல் புத்தரின் வாழ்க்கை வரலாற்றைக்கூறுவது. புத்தசரிதை என்ற இனிய செய்யுட் பகுதியைத் தன்னகத்தே கொண்டது. தூயதென் தமிழ்ச் சொற்களால் இயங்குவது.

தக்ஷிண சரித்திர வீரர்கள் :- நாம் நன்கறியாத பழக்க வழக்கங்களைக்கொண்ட பிற பிரதேசங்களில் விளங்கினோரைப் பாத்திரங்களாகக் கொள்வதிலும் நமது நேர் முன்னோர் எனத்தகும் தென்னாட்டவரைக்

கொள்வது மிகப் பயன் தருவது. படிப்பவர் உளத்தில் ஊசிபோல் இறங்கி வேரூன்றிச் சரித்திர உணர்ச்சியையும் நமது தொன்னிலையைப் பற்றிய அறிவையும் வளர்க்குமென்று கருதி தளவாய் அரியநாத முதலியார், மைசூர் ஹைதர் அலி, கான்சாகிப் கம்பந்தான் ஆகிய இம் மூவரைப்பற்றி இந்நூலை எழுதியுள்ளார். ஏழையாகப் பிறந்து அயராத உழைப்பின் திறத்தால் நன்னிலை எய்திய தளவாய் அரியநாத முதலியார் அவர்களது வாழ்க்கை 'எண்ணிய எண்ணியாங்கெய்துப எண்ணியர் திண்ணியராகப் பெறின்' என்ற திருக்குறள் வாக்கிற்கு இலக்காக விளங்குவது என்று ஆசிரியர் விளக்கிக் காட்டுகிறார். ஹைதர் அலியின் வாழ்க்கை வரலாற்றுத் திறம்பட எழுதப் பெற்றுள்ளது. சில சொற்களில் ஹைதரின் உருவத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறார். ஒரு சாமான்யப் போர்ச் சேவகன், சொற்பக் கூலிக்காக செல்வம், செல்வாக்கு எதுவுமின்றி வயிறு பிழைக்கும் பொருட்டு தன் நாடு நீங்கி இந்நாடு வந்து குடியேறிய ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவன். தன் பெயர்கூட எழுதத் தெரியாத தற்குறிப்பேதை. இப்படிப்பட்ட ஒருவன் இயற்கையில் அமைந்த தன் தோள் வலி, மூளை வலி, சாதுர்யம், தைரியம் ஊக்கம் முதலிய குண விசேஷங்களைத் துணையாகக் கொண்டு பூமி எங்கும் போர் முழக்கம் மிஞ்சித் தீர சூரர்கள் மலிந்து திகழ்ந்த நாளிலே தன் பெயர் கேட்டோரெல்லாம் பீதியுற்று நடுநடுங்கும் வீரசிகாமணியாய் விளங்கியது மன்றி மகத்தானதோர் ராஜ்யாதிபதியாயும் சிறப்புற்று விளங்கினன் என்றால் இந்த அற்புதம், அழுக்குப் பிடித்து அரிதில் நகருமோர் சிறு புழு, வானவில்லினும் மிக்க பிரகாசமும், விசித்திரமும் கூடிய பல வர்ணப் பட்டுப்

பூச்சியாக மாறிப் பறந்திலங்கும் காட்சியினும் அதிக ஆச்சரியத்தை விளைவிக்குமன்றோ? "ஓர் அற்புத வீரர்" என்று ஆசிரியர் கூறும்போது நாம் நம் மனக் கண் முன் காண்பது சொல் ஓவியம் என்பதில் ஐயப்பாடில்லை. ஆசிரியர் குறிப்பிடும் மூன்றாவது வீரர் கான்சாகிப் கம்மந்தான் என்பவர். பிறப்பில் வேளாளர் குலத்தினர். முஸ்லிம் மார்க்கத்தைத் தழுவியவர். இதனை ஆசிரியர் வேளாண்மைக்குப் பிறந்து வாளாண்மையிற் சிறந்து முகமதியராக இறந்த கான்சாகிப் கம்மந்தான் என்று அழகுபடக் கூறுவர். இளம் பருவத்தில் துஷ்டராயும் பெற்றோருக்கு அடங்காதவராயிருந்த கம்மந்தான் பிரஞ்சுக்காரரின் கூட்டுறவால் பிரஞ்சு, இங்கிலீஷ், போர்த்துக்கீசிய பாஷைகளில் தேர்ந்து பின்னர் நவாபின் சேவையில் தண்டற்காரன், சுங்கச் சாவடிக்காரன், சிப்பாய்த் தலைவன், ஹவில்தார் வேலைகளிலிருந்து படிப்படியாய் உயர்ந்து ஒரு சிப்பாய்க் கம்பெனியின் தலைவராகி, சுபேதார் என்னும் பட்டத்தையும் பெற்று, வீர வாழ்க்கை வாழ்ந்தவர். இம் மூவர் தம் சரிதையும் சரித்திரத் தலைவர்களுடைய பெருமைக் கேற்ற பெருமித நடையில் எழுதப் பெற்றிருப்பது நூலாசிரியரது எழுத்து மேதைக் கோர் எடுத்துக் காட்டாமென்க.

கவிகள், கட்டுரைகள், வரலாறுகள் ஆகிய இலக்கியத் துறைகளிலெல்லாம் புலமையுடையராம் இப்பகுதிகளில் வளமார்ந்த நூல்கள் இயற்றியுள்ள மாதவையா அவர்கள் தொடர் கதை எழுதுவதிலே தலை சிறந்தவர் என்பதை அவர்தம் நூற்கள் யாவற்றையும் வாசித்தவர்கள் இலகுவில் அறிவர்.

மனிதன் தன்னுடைய உருவத்தைக் கண்ணாடியிற் காண விழைகின்றான். கண்டு களிக்கின்றான். எழுத்தாளனும் தான் வேறு, சமூகம் வேறு என்ற பிரிவுணர்ச்சியில்லாதவனாக சமூகத்தோடு ஒன்றிய, உணர்ச்சியுடையவனாய்த் தனது சமுதாயத்தின் சாயலைத் தான் எழுதிய நூற் கண்ணாடியிற் காண விரும்புகின்றான். அது எதற்கு? சமூக நிலையைக் கண்டு மகிழ்வான். குறைபாடுகள் இருப்பதென்றால் அவற்றையும் கூசாது கூறுவான். கசப்பு மருந்தினை அருந்துவோர்க்கு அதன்மீது வெல்லக்கட்டி பூசி உண்ணச் செய்வார் போன்று ஆசிரியன் சமுதாயக் குறைகளை விறுவிறுப்பான கதையின் மூலம் மக்கட்கு அறிவுறுத்துவான். அவற்றை நீக்கப் பாடுபடுவதைத் தன் கடமையாகக் கொள்வான்.

மாதவையா தாம் எழுதிய தொடர்கதைகளில் சமுதாயக் குறைகளைப் பட்டவர்த்தனமாகக் கூறுகின்றார். இவ்வகையில் கசப்பு மருந்திற்கு வெல்லக்கட்டி பூசி விநியோகிக்கும் ஆற்றலுக்கு அவர்கள் அப்பாற் பட்டவர்கள் என்றே எண்ணுதல் வேண்டும். மனதில் எழும் எண்ணங்களை அப்படியே எழுதும் துணிவு படைத்தவர்கள். எதையும் மழுப்புவதுமில்லை மறைப்பதுமில்லை. கறந்த பால் கறந்தபடி களங்கமறப் பேசுதல் இவரிடத்தில் காணப் பெறும் சிறந்த பண்பு. இந்த இயல்புதான் இவரியற்றிய தொடர் கதைகளுக்குத் தனித்த சிறப்பை அளிக்கின்றது.

தில்லைக் கோவிந்தன் என்ற தொடர் கதையில் நிலத்தைப் பண்படுத்தி உழுபவர்களாக, நிலத்திலே நெற்றி வேர்வையைக் கொட்டுபவர்களாக, அரும் பாடுபடும் தமிழ்ப் பெருங் குடிகளின் தீராத் தரித்திரத்

தன்மையை உணர்ச்சி ததும்பும் சொற்களிலே உரைக்கின்றதைக் கேட்கிறோம். "கீழ்ச்சாதியினரான இவ்வுழவர்கள் பூதேவர் வாழும் திருக்கோயில்களுக்கு நெடுந்தூரத்திலே தாங்கள் பயிரிடும் வயல்களுக்கு இடையேயுள்ள திடல்களிலே கூரை வேய்ந்த சேரிக் குடிசைகளில் ஆடு, மாடுகளோடும், நாய், பன்றி முதலியவைகளோடும் அநாதைகளாய்த் தீராத் தரித்திரத்திலே ஆழ்ந்து எவ்வாறோ காலந் தள்ளினர்."

"தில்லைக் கோவிந்தன்" என்பான் தன் பாட்டனார் தீண்டாமையை எத்துணை நுணுக்கமாய் அநுசரித்தார் என்பதை எடுத்துக் கூறுவது ரசமாக இருக்கிறது. மூட நம்பிக்கையால் மேற்கொண்ட பழக்கத்தை விவரிப்பதில் ரசமென்ன வந்தது என்று கேட்கலாம். தில்லைக் கோவிந்தன் என்ற கற்பனைத் தலைவன் மூலமாய் எழுத்தாளர் மாதவையா காய்தல் உவத்தல் இன்றி நடு நிலைமையோடு நிலைமையைக் கூறி அதைப் பற்றிய வியாக்கியான மொன்றும் சொல்லாமல் வாசகர்கள் தாமே அறிந்து சிரிக்கச் செய்வது ரசமுடையது தானே. தில்லைக் கோவிந்தன் கூறுகின்றான்: அதனால் அவன் (அதாவது அத் தீண்டத்தகாதவன் என்று கருதப் பட்டவன்) என் பாட்டனாரைச் சிறிதும் மதியாமலே சேறு நிறைந்த வயல்களுக்கும், முள் அடர்ந்த பரப்புகளுக்கும் நடுவே அமைந்த சர்க்கார் ரஸ்தாவின் நடுவே நேராக நடந்து வந்தான். அவனுடன் பேசினாலும் தன்னுடைய மூச்சு அசுத்தமாய்விடும் என்று நினைந்து என் பாட்டனார் தனது கைகளாலே தட்டியும் விலகி ஒதுங்கும்படி சைகை செய்தும் பார்த்தார். அவனோ செவிட்டுக் குருடன் போல நேரே நடந்து வந்தான். வேறு கதி

யின்றி என் பாட்டனார் தாமே பஸ்தாவை விட்டு விலகி வரப்பு வழியே செல்வதற்காக ஓடினார். அவனும் பஸ்தாவின் ஓரம் வரையில் அவரைத் துரத்திக்கொண்டு வந்து இன்னும் அதிவேகமாக ஓடிப்பிடி செய்தான். இதனால் கடுங்கோபம் கொண்ட என் பாட்டனார் பக்கத்திலுள்ள தோட்டத்தில் வேலைசெய்து கொண்டிருந்த ஒருவனைக் கூப்பிட்டு "இவனுக்குப் புத்தி புகட்டிவை செய்" என்றார். நாங்கள் எல்லோரும் அவரின் பாதிக்கு மேல் வைக்கு அப்பட்டைத எடுத்துக்கொண்டு போயிக் வந்தபடி வைத்துக்கொண்டு விளாசினோம். அவர் பய அவனை விசாரணைக்குக் கொண்டு வந்தபோது நானும் இரண்டு கல்லை எடுத்து அவன் மீது விட்டேன். அவனும் சர்க்கார் நியாய சபையிலே முறையிட்டுக் கொண்டான். அந்த வழக்கை விசாரித்த சப் மாஜிஸ்திரேட்டுக்குத் தம் உத்தியோகம் நிலைக்க வேண்டுமானால் குற்றஞ்சாட்டப் பெற்றவர்கள் அவசியம் தண்டிக்கப்பட வேண்டும் என்று ஜில்லா மாஜிஸ்திரேட்டு அந்தரங்கமாகக் கட்டளை யிட்டிருந்தார் என்று சொல்லிக் கொண்டார்கள். என் பாட்டனாருக்கு நூறு ரூபாயும் வேறு இருவருக்குத் தலைக்கு ஐந்து ரூபாயும் அபராதம் விதிக்கப்பெற்றது.

சமூக வாழ்க்கையிலுள்ள குறைபாடுகளை மட்டும் கூறி வாழ்க்கையில் காணும் நல்லியல்புகளை மறந்து விடுவதில்லை உண்மைக் கதாசிரியன். குறைபாடுகளைக் குறிப்பிடுவது போன்று நன்மையையும் எடுத்துக்காட்டுகிறான். நல்ல பண்புடையாரையும் அறிமுகப் படுத்துகின்றான். வாழ்க்கை மலர்ப் படுக்கை அல்ல வென்பதை அறிகின்ற கதாசிரியன் அது வெறும் முட்புதர்

அல்லவென்பதையும் உள்ளூர உணர்ந்திருக்கின்றான். இல்லைக் கோவிந்தன் தனது கல்லூரியில் ஆசிரியரொருவரது அருங் குணங்களைப் பாராட்டுகின்ற பகுதி படித்தின்புறத்தக்கது. "ஆயினும் நான் ஒரு வருஷகாலமட்டும் படித்த கலாசாலை ஒன்றிலிருந்த துறவியான ஆசிரியர் ஒருவர் என் மனதில் என்றும் அகலாதவாறு அமர்ந்திருக்கின்றார். யாவரிலும் சிறந்த கல்விமானும் ஆசானுமாய் இருப்பினும் தம்மைக் காட்டிலும் திறமையிற் சிறந்த ஆசிரியர்கட்குச் சாதாரணமாய்க் கிடைக்கும் சம்பளத்தில் ஒரு பகுதிதான் அவர் ஊதியமாகப் பெற்றுக்கொள்வது. இப்படித் தன் அருமைத் தாய்நாட்டையும் அதிலும் அரிய குடும்பத்தையும் இளவயதிலேயே பிரிந்து வந்து தூரதேசமாகிய இந்த அயல்நாட்டிலே அறிவையே பத்தினியாகவும், மாணவர்களையே மக்களாகவும் கொண்டு தம் வாழ்நாளை இங்கேயே கழித்து வருகிறார். மாணவர்களைப் போலவே தாமும் பிரம்மசாரியாகவே எளிய தனி வாழ்க்கை வாழ்ந்து தாம் பெறும் சொற்பச் சம்பளத்திலும் சிறிது மிருத்து, மிருத்ததோடு தமது பிதுரார்ச்சிதமாகக் கிடைத்த சொத்தின் வருமானத்தின் பெரும் பாகத்தையும் சேர்த்து தாம் உழைக்கும் கலாசாலையை அபிவிருத்தி செய்வதிலும் தம் மாணவர்களுக்கு வேண்டிய வசதிகளைத் தேடிக் கொடுப்பதிலும் செலவிடுகிறார். மானிடர்க்கு அமைந்த இயற்கை நற்குணத்திலும், கல்வியைப் பரப்புவதிலும் அவருக்கு அபாரமான நம்பிக்கை இருந்தது. அவரது மனமானது கருணை என்னும் பாலால் நிரம்பப் பெற்றிருந்தது. உலகாயுதக் கொள்கையாலும், சுயநலத்தை மட்டுமே கருதித் தமக்குறும் பயனையே எதிர்பார்க்கும் நடவடிக்கைகளாலும் சர்வ

நாசஞ் செய்யும் நாஸ்திக புத்தியாலும் இருண்டு குழப்ப முற்றிருக்கும் லௌகீக வாழ்க்கையாகிய பெருங்கடலிலே மொத்துண்டு அங்குமிங்குமாய்த் தத்தளிக்கும் வாலிபர்களின் மனங்களாகிய கப்பல்களுக்கு அந்நாளிலே ஆத்ம ஸமர்ப்பணமாகிய தியாகச் செயலாலும், தயாளக் கொடையாலும் மேம்பட்டு விளங்கிய அவரது வாழ்க்கையானது கடலின் நடுவே ஒரு தனிப்பாறையிலே நாட்டப்பெற்ற தீபஸ்தம்பம் போல் ஒளி வீசித் திகழ்ந்தது"

இத்தகைய நல்லியல்புகள் மல்கிய கதாபாத்திரங்களை ஆசிரியரது பத்மாவதி சரித்திரம், விஜயமார்த்தாண்டம், முத்து மீனாட்சி முதலிய நூற்களில் கண்டு பயன்பெறலாம்.



Printed at Sri Bharathi Press, Choolai, Madras.—1951.